கைப்பேசிப் பதிப்பு

# மனுஸ்மிருதி

## பெண்கள் - சூத்திரர்களைப் பற்றி என்ன சொல்கிறது?

அசல் மனுஸ்மிருதியிலிருந்து தமிழில் மொழி பெயர்க்கப்பட்டதில் தொகுக்க பெற்ற சில பகுதிகள்




விடுதலைச் சிறுத்தைகள் கட்சி வெளியீடு

நூல்

**மனுஸ்மிருதி**

தொகுப்பு

**கௌதம சன்னா**


பதிப்பு : முதல் நவம்பர் 2022 - முதல் பதிப்பு

வெளியீடு : விடுதலைச் சிறுத்தைகள் கட்சி

பக்கங்கள் - 32

அச்சகம் : விடுதலை அச்சகம், வேப்பேரி, சென்னை - 3

விலை :

மக்கள் விழிப்புணர்விற்காக

விலையில்லாமல் வெளியிடப்படுகிறது.


- ☸ -

ஆதார நூல்கள் :



மநு தர்ம சாஸ்திரம்

KOVILOOR MADALAYAM

தமிழில்

திருலோக சீதாராம்

7166

R689

பதிப்பாசிரியர்

பாகவத சிரோமணி, பாகவத சூடாமணி,

பாகவத ரத்னம் கோடையிடி

ஏ.கே. கோபாலன்

தொலைபேசி : 4835055



மனு நீதி என்னும்

மனுதர்ம சாஸ்திரம்

(மூலமும் உரையும் முழுவதும்)

உரையாசிரியர் :

பிரம்ம பீடம்

இளைய பீடாதிபதி

அன்னை ஸ்ரீ ஆனந்த நாச்சியாரம்மா

பதிப்பாசிரியர் :

விகரு. இராமநாதன்

ஸ்ரீ இந்து

பப்ளிகேஷன்ஸ்

இந்து புக் பார்க்



மநுதருமசாஸ்த்திரம்.

இராமாநுஜாசாரியரை

நா-முத்துராமசெட்டியார்

முத்துக்கோவிந்தசெட்டியார்

பு-க-சுப்பராயமுதலியாரால்

பு-ம-சபாபதிமுதலியாரது

GOVINDA CHETTY

MADRAS

Copy Right



॥ श्रीः ॥

॥ धर्मपद्धतिः ॥

ஸ்ரீத்ர்யம்பகராயமகி அவர்களால்

தொகுக்கப்பட்ட

ஸ்த்ரீகளுக்குரிய

தர்மங்களின் பத்ததி

எஸ். ஆர். கிருஷ்ணமூர்த்தி அய்யர்

31, தெற்கு மாடவீதி, மயிலாப்பூர்

சென்னை - 4.

# மனுஸ்மிருதி

## பெண்கள் - சூத்திரர்கள் பற்றி என்ன சொல்கிறது ?

**அசல் மனுஸ்மிருதியிலிருந்து தமிழில் மொழிபெயர்க்கப்பட்டதில் தொகுக்கப்பெற்றப் சில பகுதிகள்**




*வெளியீடு*

**விடுதலைச் சிறுத்தைகள் கட்சி**

தலைமையகம் - அசோகர் நகர் - சென்னை

# ஆர். எஸ். எஸ்ஸின் கொள்கை அறிக்கையே

# மனுஸ்மிருதி!

முன்னுரை

முனைவர்.தொல்.திருமாவளவன்

## இந்தியாவை ஆளுவது மனுஸ்மிருதியே!

*மனுஸ்மிருதி எங்கே உள்ளது? தற்போது புழக்கத்தில் இல்லாத ஒன்றைப் பற்றி ஏன் பேசவேண்டும்? இப்படி சிலர் கேள்வி எழுப்புகின்றனர். சிலர் அதன் விவரம் அறியாமல் கேட்பது சரி. ஆனால் எல்லாம் அறிந்திருந்தும் சிலர் வேண்டுமென்றே குதர்க்கமாக கேட்கின்றனர்.*

*இந்துச் சமூகம் எனப்படுவது முழுக்க முழுக்க மனுஸ்மிருதியின் அடிப்படையில்தான் கட்டமைக்கப்பட்டுள்ளது. இன்றைக்கும் அதனை அடிப்படையாகக் கொண்டே அது இயங்குகிறது. சமூகம், கலாச்சாரம் - பண்பாடு, கலை, இலக்கியம், அரசியல் மற்றும் பொருளாதாரம் என அனைத்துமே மனுஸ்மிருதி அடிப்படையிலான வரையறைகளைக் கொண்டே செயல்படுகிறது. தலைமுறைத் தலைமுறையாகத் தொடர்கிறது. இந்துச் சமூகத்தினரின் இன்றைய வாழ்விலும் மனுஸ்மிருதி என்னும் மனுச்சட்டமே அரசமைப்புச் சட்டமாக இருந்து கோலோச்சுகிறது.*

*புரட்சியாளர் அம்பேத்கர் வகுத்தளித்த இந்திய*

அரசமைப்புச் சட்டம் 1950 சனவரி 26 அன்று நடைமுறைக்கு வந்துவிட்டது என்றாலும், அரசியல் தவிர்த்து சமூகம், கலாச்சாரம் உள்ளிட்ட தளங்கள் அனைத்திலும் நூறு சதவீதம் மனுச்சட்டமே அரசமைப்புச் சட்டமாக நடைமுறையிலிருக்கிறது. அரசியல் தளத்திலும்கூட நாடாளுமன்ற சனநாயக நடைமுறைகளில் மட்டுமே சற்று நெகிழ்வுத் தன்மை ஏற்பட்டு, புரட்சியாளர் அம்பேத்கர் அவர்களின் இன்றைய அரசமைப்புச் சட்டத்திற்கு இடம்கொடுக்கிறது. மற்றபடி அரசியல் தளத்திலும்கூட பெருமளவில் மனுஸ்மிருதியின் தாக்கமே மேலோங்கியுள்ளது.

மனுஸ்மிருதி என்பது வைதீக மதம் என்னும் வேத மதத்தைப் பின்பற்றியோ ருக்கென மனு என்பவரால் தொகுக்கப்பட்டதாகும். இதனை அவ்வேத மதத்தின் கொள்கை அறிக்கை மற்றும் அரசமைப்புச் சட்டம் எனலாம்.

வேத மதம் என்பது ஆரியர் என்னும் மரபினத்தைச் சார்ந்தவர்களுக்குரிய கலாச்சார நிறுவனமாகும். அதனைப் பின்பற்றும் ஆரியர்களுக்கான வாழ்வியல் நெறிமுறைகள் மற்றும் சமூக அமைப்பு முறைகளை வரையறுத்துள்ள ஒரு கோட்பாட்டு ஆவணம் தான் மனுஸ்மிருதி ஆகும்.

வர்ணாஸ்ரமம் என்பதுதான் மனுஸ்மிருதியின் அடிப்படையான கோட்பாடாகும். அக்கோட்பாட்டின் அடிப்படையில்தான் இந்துச் சமூக அமைப்பு முறையும் கட்டமைக்கப்பட்டுள்ளது. அதாவது, அச்சமூகம் சவர்ணாஸ் மற்றும் அவர்ணாஸ் எனும் இருபெரும்

பிரிவுகளைக் கொண்டதென அது வகைப்படுத்துகிறது. அவற்றில், சவர்ணா பிரிவு நான்கு வர்ண அடுக்குகளைக் கொண்டதாகும். அவர்ணா பிரிவு அதற்குட்படாத எதிர்க் கருத்தியலைக் கொண்டதாகும்.

சவர்ணா எனப்படும் நான்கு வர்ண சமூக அமைப்புக்கான வாழ்வியல் நெறிமுறைகளை வரையறுத்திருப்பதே மனுஸ்மிருதி ஆகும். அத்தகைய மனுஸ்மிருதியின் கோட்பாடாக விளங்கும் வர்ணாஸ்ரமத்தின் மையக் கருப்பொருள், "பிறப்பினடிப்படையில் உயர்வு - தாழ்வு" என்னும் கருத்தியலே ஆகும்.

மனுஸ்மிருதியின் கருப்பொருள் வர்ணாஸ்ரமம்; வர்ணாஸ்ரமத்தின் கருப்பொருள் பிறப்பினடிப்படையிலான உயர்வு- தாழ்வு; உயர்வு- தாழ்வின் கருப்பொருள் பாகுபாடு; பாகுபாட்டின் கருப்பொருள் ஆதிக்கம்; ஆதிக்கத்தின் கருப்பொருள் உழைப்புச் சுரண்டல். எனவே, உழைப்புச் சுரண்டலுக்கான மூலக் கோட்பாட்டு ஆவணம் தான் மனுஸ்மிருதி.

உழைப்புச் சுரண்டல் உலகம் முழுவதும் உள்ளது. வலியோர் எளியோர் என்னும் முரண்பாட்டின் விளைவாக இது நிகழ்கிறது. ஆனால், இந்திய மண்ணில் மனுஸ்மிருதி வரையறுத்துள்ள வர்ணாஸ்ரமக் கோட்பாட்டின் அடிப்படையில் நிலைப்படுத்தப்பட்டிருக்கும் உயர்வு - தாழ்வு என்னும் பாகுபாடுகளின் வழியாகவே உழைப்புச் சுரண்டல் நிகழ்கிறது. அத்துடன், உடலுழைப்பு செய்வோர் மிகவும் கீழானவர்கள், இழிவானவர்கள் என்னும் தாழ்வு மனநிலையைக் கட்டமைத்து அவர்கள்

மீண்டெழ இயலாதவகையில் முடக்கி சுரண்டலைத் தக்கவைத்துக் கொண்டிருக்கிறது. அதாவது, எதிர்ப்போ, கிளர்ச்சியோ, புரட்சியோ வெடிக்காத வகையில் மக்களைப் பிளவுபடுத்தியும் உயர்வு - தாழ்வு என்னும் உளவியலால், வர்ணத்தால், சாதியால், பாலினத்தால் உயர்ந்தோர் எனப்படுவோர் எளியோரின் உழைப்பை சுரண்டும் கொடுமையைத் தக்கவைத்துக் கொள்வதற்கும் ஏதுவாக மனுஸ்மிருதி வழிவகை செய்கிறது.

மனுஸ்மிருதியின் இத்தகைய ஆதிக்கம், ஒடுக்குமுறை மற்றும் சுரண்டல் ஆகியவற்றால் காலம் காலமாக, தலைமுறை தலைமுறையாய்ப் பாதிக்கப்படுவது சூத்திர வர்ணச் சமூகப்பிரிவினரும் அவர்ணச் சமூகப் பிரிவினரும் நான்கு வர்ணங்கள் உள்ளிட்ட அனைத்துச் சமூகப் பெண்களும் ஆவர்.

மனுஸ்மிருதி, தீண்டப்படாதோர், பழங்குடியினர் ஆகிய அவர்ணப் பிரிவினரைப் பற்றி ஏதும் குறிப்பிடவில்லை. ஏனெனில் அவர்கள் நான்கு வர்ணங்களுக்குள் அடங்கவில்லை. எனவேதான், அவர்கள் அவர்ணஸ்தர் என அழைக்கப்படுகின்றனர். ஆனாலும் அவர்களை இந்துக்கள் என்னும் வரையறைக்குட்படுத்தி அவர்கள்மீது ஆதிக்கம் செயவதும் ஒடுக்குமுறைகளை ஏவுவதும், அதன்வழி அவர்களின் உழைப்பைச் சுரண்டுவதும் நான்கு வர்ணங்களுக்கும் கீழானவர்கள் என இழிவுபடுத்துவதும் தொடர்கிறது.

அதேபோல சவர்ணஸ்தர்களில் நான்காவது வர்ணமான சூத்திரர்கள் மற்றும் நான்கு வர்ணங்களையும் சார்ந்த

மகளிர் ஆகியோர் ஒடுக்கப்படுவதும் சுரண்டப்படுவதும் தொடர்கிறது. அதற்கு மனுஸ்மிருதியின் வர்ணாஸ்ரமக் கோட்பாடும் அதனைத் தொகுத்த மனு என்பவரும் தான் காரணமாகும்.

## மனுஸ்மிருதியை எதிர்ப்பது ஏன்?

புரட்சியாளர் அம்பேத்கர் 1917ஆம் ஆண்டு கொலம்பியா பல்கலைக் கழகத்தில் தனது முதல் உரையினை நிகழ்த்திய போது "எனக்கு இறந்தவரைக் கொல்லும் ஆற்றல் இருக்குமானால் நான் மனுவை தேடிக் கொல்வேன்" என்று ஆவேசமாகக் கொந்தளித்தார். அவர் அப்படிக் கொந்தளிக்கக் காரணம் மனு என்பவர் உருவாக்கிய மனுஸ்மிருதி தான்.

அந்த மனு என்பவர் சுமதி பார்க்கவா என்னும் வியாபாரம் செய்யும் பிரிவை சார்ந்த ஒரு வைஸ்யர். அவர் மனுஸ்மிருதி மூலம் இந்தியாவில் நிலவும் சாதியப் பிரிவுகளை நிலைப்படுத்தியதுடன் பார்ப்பன - பனியா சாதிக் கூட்டணிக்கான அடிப்படையை வகுத்தளித்தார். அந்தக் கூட்டணி இன்றுவரைத் தொடர்கிறது. அது மட்டுமின்றி அந்தக் கூட்டணிக்குப் பணிசெய்யும் அடிமைச் சமூகப் பிரிவாகவே சூத்திரர்களை அடையாளப்படுத்தினார் மனு.

இந்த சாதிக் கூட்டணிக்குத் தடையாக இருந்த சத்திரியர்கள் துடைத்தெறியப்பட்டார்கள் என்பதை பரசுராமர் கதை கூறுகிறது. அதாவது, சத்திரிய வர்ணத்தை முற்றாக அழித்தொழிக்கும் வகையில் சத்திரிய இனப்

படுகொலையைச் செய்தார் பரசுராமர். சத்திரியகுலப் பெண்களின் கருவறையில் இருந்த குழந்தைகளைக் கூட விட்டுவைக்காமல் கொன்று சத்திரிய வம்சத்தைச் சார்ந்த 21 தலைமுறைகளைப் பூண்டோடு அழித்தொழித்தார் என அக்கதை கூறுகிறது. அதாவது, பார்ப்பனர்களின் நலன்களுக்கு எதிராக யார் இருந்தாலும் அவர்களின் வம்சத்தையே அழித்தொழிப்பது என்கிற மேலாதிக்கவெறி தான் பார்ப்பனியமாகும்.

அத்தகைய பார்ப்பனீய மேலாதிக்க வெறித்தனத்தை இம்மண்ணில் நிலைநிறுத்திய கோட்பாடுதான் மனுஸ்மிருதியாகும். அதுமட்டுமின்றி, பார்ப்பனரல்லாத பிற வர்ணச் சமூகங்களைச் சுயமாகச் சிந்திக்கவிடாமலும் புராண மாயைகளில் சிக்க வைத்து முடக்கி வைத்திருகிறது. மேலும், பிறப்பு முதல் இறப்பு வரையில் அவர்களைக் கட்டுப்படுத்தி வழிநடத்துகிறது. அந்த அளவுக்கு மனுஸ்மிருதியானது கடவுள், ஆன்மா, மறுபிறப்பு, சொர்க்கம் - நரகம் போன்ற கற்பிதங்களின் மூலம், ஒருவகையான கருத்து மாயையினை உருவாக்கி சுயசிந்தனைக்கு இடமில்லாமல் தடுத்து வைத்திருக்கிறது. அத்துடன், மனுதருமத்தை மீறும் சூத்திரர்களுக்கும் பெண்களுக்கும் அளிக்கப்படும் தண்டனைகள் மூலம் ஒரு பேரச்சத்தையும் உருவாக்கியிருக்கிறது.

அக்காலத்தில், மன்னர்களை வளைத்துப் போட்டு மனுச்சட்டத்தையே அரசமைப்புச் சட்டமாக ஏற்கச்செய்து அதனைத் தீவிரமாக நடைமுறைப்படுத்தினர். அதன்மூலம் சூத்திரர்கள் மற்றும் பெண்களுக்குக் கல்வியை மறுத்து

அவர்களை மூடநிலையிலேயே கிடக்கவும் நீடிக்கவும் செய்தனர்.

அத்துடன், மனுஸ்மிருதி, வேதங்கள் உள்ளிட்ட இந்துக்களின் புனித - மூல நூல்களைப் பொதுமக்களின் பார்வைக்குக் கொண்டு வராமலும் தடுத்துவிட்டனர். அத்தகைய தடையினை மனுஸ்மிருதியே உருவாக்கி வைத்திருக்கிறது. அதாவது, சூத்திரர்கள் மற்றும் பெண்கள் வேதம் உட்பட எந்த புனித நூல்களையும் கற்கக் கூடாது என்றும் பார்ப்பனர்கள் அவர்களுக்குக் கற்பிக்கக்கூடாது என்றும் தடைவிதித்துள்ளது.

பெண்களுக்கு பூணூல் அணியும் உரிமை இல்லை என்பதால் அவர்களும் சூத்திரர்களே என்பது மனுவின் தீர்ப்பு. பார்ப்பனர்களின் மேலாதிக்கத்தை ஏற்றுக் கொள்ளாதவர்கள் அனைவரும் நரகத்திற்கு போவார்கள் என்று பயம் காட்டுகிறார் மனு. பார்ப்பனர், ஷத்திரியர் வைசியர் ஆகிய மூன்று வர்ணத்தவருக்கும் சேவை செய்வதுதான் சூத்திரர்களின் கடமை; அவ்வாறு பணிவிடைகள் செய்வதன் மூலமே சூத்திரர்களுக்குச் சொர்கம் கிடைக்கும் என்றும் கூறுகிறார் மனு. அதுமட்டுமின்றி சூத்திர்களின் பிறப்பே மிகவும் கீழானது என்று வரையறுத்திருக்கிறார்.பெண்களைப் பற்றிய மனுவின் எண்ணம் மிக மிக இழிவானதாகும்.

அதாவது, பெண்கள் இயல்பிலேயே சபல புத்தியுடையவர்கள்; பிறப்பிலேயே தாழ்ந்தவர்கள்; உறவுமுறையற்று உடற்கூடலுக்கு முனைவார்கள் என்பதுதான் பெண்களைப்பற்றிய மனுவின் மதிப்பீடு.

பெண்களைத் தனியே விடக்கூடாது என்றும்; அவர்கள் பிறப்பு முதல் இறப்புவரையில் ஆண்களின் கட்டுப்பாட்டிலேயே இருக்க வேண்டும் என்றும்; பெண்கள் கல்விக் கற்கவும் கூடாது என்றும் வலியுறுத்துகிறார் மனு.

அது மட்டுமின்றி பெண்களுக்குக் குழந்தையிலேயே திருமணம் செய்ய வேண்டும் என்றும்; கணவன் இறந்தால் அவளை உடன்கட்டை ஏற்றி அவனுடனே எரித்துவிட வேண்டும் என்றும்; அப்படி இல்லை என்றால் அவள் காலம் முழுவதும் மறுமணம் செய்யாமல் விதவையாக வீட்டில் முடங்கி இருக்க வேண்டும் என்றும் சொல்கிறார்.

இவ்வாறு பெண்களின் உரிமைகள் மற்றும் இயல்பான சுதந்திரத்திற்கு முற்றிலும் எதிராக உள்ளார் மனு. மேற்கண்ட வன்கொடுமைகளில் தற்போது கணவனோடு பெண்ணை எரிக்கும் சதி வழக்கம் மட்டும்தான் நடைமுறையில் இல்லை. மற்றவையெல்லாம் இன்றும் நடைமுறையில் உள்ளன. மனுஸ்மிருதியைப் படிக்கும் ஒவ்வொருவரும் இதனைப் புரிந்துக் கொள்ளலாம்.

## ஆர்.எஸ்.எஸ்-ஐ எதிர்ப்பது ஏன்?

ஆர்.எஸ்.எஸ் என்பது இந்துத்துவம் என்கிற சனாதனத்தை உயர்த்திப் பிடிக்கும் ஒரு பயங்கரவாத அமைப்பாகும். இது இந்து மக்களிடையே அமைதியையும் நல்லிணக்கத்தையும் வளர்ப்பதற்கு மாறாக மதத்தின் பெயராலும் வர்ணம் மற்றும் சாதி ஆகியவற்றின் பெயராலும் சமூகங்களைப் பிளவுபடுத்தி அரசியல் ஆதாயம் தேடும் அமைப்பாகச் செயல்படுகிறது.

*அதன் அடிப்படையான நோக்கம் மனுஸ்மிருதியின் வர்ண- சாதி பாகுபாடுகளை நீர்த்துப்போகாமல் நிலைநிறுத்துவதே ஆகும். அதன்மூலம் இந்து மதவழி தேசியத்தைக் கட்டமைப்பதும் இந்து மதம் சார்ந்த அரசை உருவாக்கி பார்ப்பனீய மேலாதிக்கத்தைத் தக்கவைத்துக் கொள்வதுமாகும். அதற்கென மராட்டிய சித்பவன் பார்ப்பனர்களால் உருவாக்கப்பட்ட பார்ப்பனிய மேலாதிக்க மதவெறி அமைப்பே ஆர்.எஸ்.எஸ் ஆகும்.*

*மராட்டியத்தை ஆண்ட சத்ரபதி சிவாஜி மற்றும் அவரது சந்ததியருக்குப் பின்னர், அவ்வாட்சியில் அமைச்சர்களாக இருந்த பேஷ்வாக்கள் என்னும் பார்ப்பனர்கள் ஆட்சியைக் கைப்பற்றிக் கொண்டார்கள். பேஷ்வாக்களின் ஆட்சியில் மனுஸ்மிருதியை மிகத் தீவிரமாக நடைமுறைப்படுத்தினர். அதனால், பெண்கள், சூத்திரர்கள் மற்றும் அவர்ணர்களான தீண்டப்படாதோர், பழங்குடியினர் ஆகியோர் கடுமையான வன்கொடுமைகளுக்கு ஆளாயினர். இச்சமூகப் பிரிவினருக்கு கல்வி, அதிகாரம், சுதந்திரம் முதலியவை மறுக்கப்பட்டன. அத்துடன், அவர்கள் விலங்குகளை விட மிகஇழிவாக நடத்தப்பட்டனர்.*

*இவ்வாறு பேஷ்வாக்களின் சனாதன கொடுங்கோலாட்சியின் வன்கொடுமைகளால் கடுமையாகப் பாதிக்கப்பட்ட மக்கள், 1818 சனவரி 01 அன்று ஆங்கிலேய படையின் துணையோடு பீமா கொரேகான் எனுமிடத்தில் அவர்களின் படையைத் தோற்கடித்து பேஷ்வாக்களின் அரசைத் தூக்கி எறிந்தனர். தோற்கடிக்கப்பட்ட பேஷ்வா பார்ப்பனர்களின்*

படை சிதறியோடியது. அப்படி சிதறி ஓடியவர்களில் முக்கியமானவர்கள் கொங்கண பார்ப்பனர்கள் என்னும் சித்பவன் பார்ப்பனர்களும் அடங்குவர். பிற்காலத்தில், அவர்களின் வழித்தோன்றல்கள் 107 ஆண்டுகள் கழித்து உருவாக்கிய இயக்கம்தான் ஆர்.எஸ்.எஸ் எனும் ஃபாசிச கலாச்சார தேசியவாத அமைப்பாகும். இந்த அமைப்பு உள்வாங்கிக்கொண்ட கொள்கை - கோட்பாடுதான் மனுஸ்மிருதியாகும்.

அத்தகைய மனுஸ்மிருதியை மீண்டும் அதிகாரபூர்வமாக இந்தியாவின் அரசமைப்புச் சட்டமாக்க வேண்டுமென்பதே அவர்களின் முதன்மையான நோக்கமாகும். ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்த வர்ணாஸ்ரம சமூகக் கட்டமைப்பை - சமூக ஒழுங்கப்பை தக்கவைக்க வேண்டுமென்பதே அவர்களின் இறுதி இலக்காகும். அதற்கு சமூகநீதியை முற்றாக சிதைக்க வேண்டும் என்பது அவர்களின் செயல்திட்டமாகும்.

சமூகநீதி கோட்பாடானது பழைய சனாதன சமூக ஒழுங்கைத் தளர்வுறச் செய்கிறது. மெல்லமெல்ல காலப்போக்கில் அவ்வொழுங்கைத் தகர்த்துவிடும் என்னும் அச்சத்தையும் உருவாக்குகிறது. அதிகாரம் மறுக்கப்பட்டவர்களை அதிகார வலிமையுள்ளவர்களாக பரிணாமம் பெறவைக்கிறது. எனவே சமூகநீதிக் கோட்பாட்டைச் சிதைப்பது சனாதனிகளின் தவிர்க்க முடியாத தேவையாகிறது. அதனடிப்படையில் ஆர்எஸ்எஸ் அமைப்பினர் சமூகநீதிக்கெதிராக நடத்திவரும் வன்முறைகள் மற்றும் பயங்கரவாத செயல்கள் ஏராளமாகும். அவ்வாறு

அவ்வமைப்பு கட்டவிழ்த்துவிட்டுள்ள வன்முறைகள், கலவரங்கள், சாதிய - மத மோதல்கள், குண்டு வெடிப்பு போன்ற பயங்கரவாத நடவடிக்கைகளைப் பற்றிய ஏராளமான உறுதிப்படுத்தப்பட்ட தரவுகள் இணையத்தில் காணக்கிடைக்கின்றன.

இத்தகைய பயங்கரவாத நடவடிக்கைகளின் மூலம் பெரும்பான்மை மதவாதத்தை முன்னிறுத்தி, சிறுபான்மையினருக்கெதிரான வெறுப்பை விதைத்து, பெரும்பான்மை இந்துக்களின் வாக்குவங்கியைத் திரட்டி ஆர்எஸ்எஸ் - பாஜக அமைப்பினர் ஆட்சிபீடத்தைக் கைப்பற்றியுள்ளனர். இந்நிலையில் ஆட்சியதிகாரத்தைப் பயன்படுத்தி அவர்கள் இந்தியாவின் அனைத்து ஜனநாயக நிறுவனங்களையும் கைப்பற்றித் தங்களின் பார்ப்பனிய மேலாதிக்கத்தை நிலைநிறுத்திக் கொண்டிருக்கின்றனர். எனவே, அவர்களைப் பற்றி நாட்டு மக்கள் புரிந்துகொள்ளும் வகையில் செயலாற்ற வேண்டியது சனநாயக சக்திகளின் கடமையாகும்.

இந்து மக்களின் உணர்வுகளையும் நம்பிக்கைகளையும் தங்களின் அரசியல் நோக்கங்களுக்காகத் தவறாகப் பயன்படுத்துகின்றனர் ஆர்எஸ்எஸ் - பாஜக அமைப்பினர் என்பதை இந்துவாக உணரும் ஒவ்வொருவரும் புரிந்துகொள்ள வேண்டும். அவ்வாறு மக்கள் அவர்களைப் பற்றிப் புரிந்துக்கொள்ளக்கூடாது என்பதில் கவனமாக உள்ளனர்.

ஆகவே, மனிதகுலத்துக்கே ஒவ்வாத மனுஸ்மிருதியை உயர்த்திப்பிடிக்கும் அவர்கள், அதனை உழைக்கும்

மக்களிடமிருந்து அதை மறைக்கும் முயற்சிகளையும் மேற்கொண்டு வருகின்றனர். ஏனெனில் உழைக்கும் மக்கள் அதனைக் கற்று அதன் நுட்பமான சதியை அறிந்து கொண்டால் அவர்களின் பார்ப்பனிய மேலாதிக்க நாசகார சிந்தனைகள் வெளிப்பட்டு விடும் என்பதால் தான். எனவே அவர்களை அம்பலப்படுத்தும் வகையில், அவர்களின் சனாதன சதியை முறியடிக்கும் நோக்கில் இது விலையில்லா சிறு நூலாக வெளியிடப்படுகிறது.

பார்ப்பன வர்ணத்தவர் சமஸ்கிருதத்திலிருந்து தமிழுக்கு மொழிபெயர்த்த மனுஸ்மிருதி நூல்கள் மூன்றினை ஒப்பீடு செய்து உருவாக்கப்பட்டுள்ள இச்சிறு வெளியீடு மனுஸ்மிருதியின் உண்மையான நோக்கங்களைத் தெளிவுப்படுத்தும் என்று நம்புகிறேன்.

குறுகிய கால இடைவெளியில் இதனைத் தொகுத்துக் கொடுத்த விசிக துணைப்பொதுச் செயலாளர் தோழர் கௌதம சன்னா அவர்களுக்கும் இதனை அச்சிடுவதற்குரிய பணிகளை ஒருங்கிணைத்த கட்சியின் துணைப் பொதுச்செயலாளர் வன்னி அரசு அவர்களுக்கும், மற்றும் விரைந்து இதனை அச்சிட்டு வழங்கிய விடுதலை அச்சகத்தாருக்கும் எனது மனமார்ந்த நன்றி.

இவண்:

**முனைவர்.தொல்.திருமாவளவன் எம்.பி.**
நிறுவனர் - தலைவர்,
விடுதலைச்சிறுத்தைகள் கட்சி.
6 நவம்பர் 2022

## குறிப்பு

இத்தொகுப்பு வெகுமக்களின் புரிதலுக்காக எளிய நடையில் தொகுக்கப்பட்டுள்ளது. பெண்கள் சூத்திரர்கள் என்று தனித்தனியே பிரிக்கவில்லை. ஏனென்றால் மனுவைப் பொருத்தவரையில் பெண்களும் சூத்திரர்களும் ஒன்றே. இருவருக்கும் கல்வி மற்றும் பூணூல் உரிமைக் கிடையாது. இந்த சிறு தொகுப்பைத் உருவாக்க துணைநின்ற ஆதார நூல்கள் இந்நூலின் இரண்டாம் பக்கத்திலும் கடைசிப் பக்கத்திலும் கொடுக்கப்பட்டுள்ளன. அந்த அத்தனை நூல்களும் சமஸ்கிருதத்திலிருந்து நேரடியாக தமிழில் மொழிப் பெயர்க்கப்பட்ட புத்தகங்களாகும். அவற்றில் கொடுக்கப்பட்ட அசல் மொழிப்பெயர்ப்புகளையும் அவற்றில் கொடுக்கப்பட்டுள்ள சமஸ்கிருத சுலோகங்களையும் ஒப்புநோக்கி சரிபார்த்தப் பிறகு இச்சிறுநூல் தொகுக்கப்பட்டது. ஆங்கில மொழிப்பெயர்ப்புகள் பயன்படுத்தப்படவில்லை. மேலும் ஆதார மொழிப்பெயர்ப்புகளை செய்தவர்கள் அத்தனைப் பேரும் பார்ப்பன வர்ணத்தை சார்ந்தவர்களே. வேறு யாருடைய மொழிப் பெயர்ப்பும் இதில் பயன்படுத்தப்படவில்லை. அதுமட்டுமின்றி கடைசிப் பகுதியில் சேர்க்கப்பட்டுள்ள ஸ்த்ரீகளுக்குரிய பத்ததி என்பது இந்து புனித நூல்களிலிருந்து தொகுப்பட்ட இந்துப் பெண்களுக்கான கடமைகளைப் பற்றியதாகும். மனுஸ்மிருதியை எவ்வாறு நடைமுறைப்படுத்த அது உதவுகிறது என்பதை மக்கள் புரிந்துக் கொள்வதற்காக இதில் சேர்க்கப்பட்டுள்ளது.

**கௌதம சன்னா**

தொகுப்பாசிரியர்

# மனுஸ்மிருதி

## அத்தியாயம் - 1

**31.** உலகைப் படைத்த பிரம்மா அது பல்கிப் பெருகும் பொருட்டு - உலகம் உய்யும் பொருட்டு நான்கு வகையினரை - நான்கு வருணத்தாரைப் படைத்தார்.

**32.** பரம்பொருளானவர், தம் தேகத்தை இரண்டாகப் பிரித்துக் கொண்டு ஒரு பாகம் ஆணாகவும், மற்றொரு பாகம் பெண்ணாகவும் மாறினார். அந்த ஆண், அந்தப் பெண்ணிடம் விராட் புருஷனை சிருஷ்டித்தார்.

**35.** (இப்போது) மனுபகவான், பிரம்மதேவர் தம் கூற்றாக மனுவுக்கு எப்படி உரைத்தாரோ, அதை அவ்வாறே இப்போது எடுத்துரைக்கிறார்.

**58.** இந்த தர்ம சாஸ்திரத்தை முதலில் உருவாக்கியவர் பிரம்மா. அவரே எனக்கு இந்த சாஸ்திரத்தை விதிமுறைப்படி உபதேசித்தார். நான் இதை மரீசி முதலான முனிவர்களுக்கு உரைத்தேன்.

**91.** பிரம்ம தேவர், சூத்திரர்களுக்கு விதித்த தர்மமோ ஒன்றே ஒன்றுதான். அது, அசூயையின்றி முதலில் கூறப்பட்ட மூன்று வர்ணத்தாருக்கும் பணிவிடை புரிதல்.

**93.** வேதங்களை உணர்ந்துள்ளதால் படைக்கப்பட்டவர்களுள் பிராம்மணன் மேலானவன்.

**100.** பூமியிலுள்ள அனைத்தும் பிராம்மணனுடையது. எனவே பிராம்மணன் எல்லா செல்வங்களுக்கும் உடைமையாளன்.

## அத்தியாயம் 2

**31.** பிராம்மண குழந்தைக்கு வைக்கும் பெயர் சுபம் தரும் வண்ணம் இருக்க வேண்டும். க்ஷத்திரியக் குழந்தைக்கு பலம் தரும் வாசகமாக இருக்க வேண்டும். வைசியக் குழந்தைக்கு செல்வம் தரும் வாசகமாக இருக்க வேண்டும். சூத்திரர்களுக்கு ஏவலன் என்பதை அறியும் வகையில் பெயர் வைக்க வேண்டும்.

**66.** சரீர பரிசுத்திக்காக, பெண்களுக்கு எல்லாக் கிரியைகளும் குறிப்பிட்ட காலத்தில் சாஸ்திர முறைப்படி, ஆனால் மந்திரங்கள் இல்லாமல் செய்ய வேண்டும்.

**67.** பெண்களுக்குத் திருமணமே உபநயன கிரியை என்று சொல்லப் படுகிறது. பதிக்கு செய்யும் பணிவிடையே குருகுலவாசம், வீட்டு வேலைகளை நிர்வகிப்பதே அக்னிஹோத்ரம் என்னும் கிரியையாகும்.

**137.** மூன்று வார்ணத்தாரில் செல்வம், பந்துமுறை, வயது, அனுஷ்டானம், கல்வி ஆகிய ஐந்து குணங்களில் அதிக குணங்கள் கொண்டவன் உயர்ந்தவன். சூத்ரர்களில் வயது முதிர்ந்தவன் உயர்ந்தவன்.

**155.** பிராம்மணர்களுக்கு ஞானத்தால் உயர்வு ஏற்படும். க்ஷத்ரியர்களுக்கு வீர்யத்தால் உயர்வு ஏற்படும். வைசியர்களுக்கு தானதானியங்களின் பெருக்கால் உயர்வு

ஏற்படும். சூத்ரர்களுக்கு வயது முதிர்ச்சியினால் உயர்வு ஏற்படும்.

**213.** ஆண்களை நிலை தடுமாறச் செய்யும் தன்மை பெண்களுக்கு உண்டு. எனவே அறிந்தவர்கள் பெண்கள் விஷயத்தில் நிலை தடுமாறாமல் இருக்க வேண்டும்.

*214.* வித்வானாக இருந்தாலும் சரி, படிக்காதவனாக இருந்தாலும் சரி, அவர்களைக் காமத்துக்கும் குரோதத்துக்கும் ஆளாக்கி தங்களுக்கு வசப்படுத்தும் சக்தி பெண்களுக்கு உண்டு.

**215.** இந்திரியங்களின் கூட்டமானது மிகவும் பலமுடையது. விவேகம் நிறைந்தவனையும் தவறான வழியில் இழுக்கும். எனவே, தாய் சகோதரி, மகள் இவர்களுடன்கூட தனித்திருக்கக் கூடாது.

**223.** பெண்ணாக இருந்தாலும், சூத்திரனாக இருந்தாலும் அவர்கள் நல்ல காரியங்களைச் செய்வார்களாயின், அவற்றைப் பற்றி நன்கு ஆராய்ந்து, அவை தன் மனத்துக்கிசைந்ததாகவும், சாஸ்திரத்துக்கு விரோதமில்லாததாகவும் இருந்தால் அவற்றைத் தானும் செய்யலாம்.

## அத்தியாயம் 3

**13.** சூத்திரன், சூத்திரப் பெண்ணை மணப்பதே சிறந்தது. வைசியன், சூத்திரப் பெண்ணையும், வைசியப் பெண்ணையும் மணக்கலாம். க்ஷத்ரியன், சூத்திரப் பெண்ணையும், வைசியப் பெண்ணையும், க்ஷத்ரியப் பெண்ணையும் மணக்கலாம். பிராம்மணன், சூத்திரப் பெண்ணையும், வைசியப் பெண்ணையும், க்ஷத்ரியப்

பெண்ணையும், பிராம்மணப் பெண்ணையும் மணக்கலாம்.

**16.** சூத்திரப் பெண்ணை மணந்தவன் பதிதன் என்று அத்ரி மஹரிஷியும், கௌதம மஹரிஷியும் கூறியுள்ளனர். சூத்திரப் பெண்ணிடம் புத்திரனைப் பெற்றால் அவன் பதிதன் என்று சௌனக மஹரிஷி கூறியுள்ளார். சூத்திரப் பெண்ணிடம் பிறந்தவன் பதிதன் என்று பிருகு மஹரிஷி கூறியுள்ளார்.

**19.** சூத்திரப் பெண்ணிடம் அதரபானம் செய்தவனுக்கும், அவளது நீண்ட மூச்சுக் காற்றுப்பட இருந்தவனுக்கும், அவளிடம் சந்ததியை உண்டு பண்ணியவனுக்கும் பிராயச்சித்தமே கிடையாது.

**156.** சூத்திர மாணாக்கருக்குக் கல்வி கற்பிப்போனும், சூத்திரனை ஆசிரியராகக் கொண்டவனும், சூத்திரருக்குத் தகுதி அளித்தமையால், தனது தகுதியை இழந்தவன் ஆகிறான்.

**178.** சூத்திரர்களுக்கு புரோகிதம் செய்பவன், தன் பந்தியில் அமர்ந்திருக்கும் எத்தனை பேரைக் தொடுகிறானோ, அத்தனை பேர் சாப்பிட்ட பலனை அன்னதாதாவுக்குக் கிட்டாதபடி அழிப்பான்.

**179.** வேத வித்தான பிராம்மணன் ஆசையினால், சூத்திரர்க்கு புரோஹிதம் செய்யும் பிராம்மணனிடமிருந்து தானம் பெறுவானே யாகில், சுடாத மண்பானை நீரில் விழுந்தால் கரைந்து போவது போன்று நாசமடைவான்.

**191.** நியமிக்கப்பட்ட பிராம்மணன் தாழ்குலத்துப் பெண்ணுடன் கூடினால், தன்னை நியமித்த கர்த்தாவின் பாபம் மொத்தத்தையும் தான் அடைகிறான்.

**249.** சிராத்தத்தில் மிகுந்த அன்னத்தை, சூத்திரனுக்குக் கொடுத்தால் கொடுத்தவனான அந்த சிராத்த கர்த்தாவான மூடன் தலைகீழாக காலசூத்ரம் என்னும் நரகத்தில் விழுவான்.

## அத்தியாயம் 4

**43.** மனைவியுடன் சேர்ந்து உண்ணலாகாது. மனைவி இருமும் போதும், தும்மும் போதும், கொட்டாவி விடும் போதும், சாவகாசமாய் தன்னிஷ்டத்துக்கு உட்கார்ந்திருக்கும் போதும் கணவன் பார்க்கக்கூடாது.

**57.** பாழடைந்த வீட்டில் தனியாகப் படுத்துறங்கக்கூடாது. தன்னைவிட கல்வியாலும் தனத்தாலும் மேம்பட்டவனை அவன் உறங்கும் போது எழுப்பக்கூடாது. மாத விலக்கான பெண்ணுடன் பேசக் கூடாது. வேதவித், தன்னை அழைக்காதபோது யாக கர்மாவில் கலந்து கொள்ளப் போகக் கூடாது.

**61.** சூத்திரன் மன்னனாக இருக்கும் நாட்டில் வசிக்கக்கூடாது. தர்ம நெறிப்படி வாழாதவர்கள் அதிகமாக இருக்கும் கிராமத்தில் வசிக்கக் கூடாது. வேதத்துக்கு விரோதமான நெறிகளையுடைய பாஷாண்டிகள் அதிகமாக உள்ள கிராமத்தில் வசிக்கக் கூடாது. சண்டாளர்கள் வசிக்கும் கிராமத்திலும் வசிக்கக் கூடாது.

**80.** சூத்ரனுக்கு இகலோகத்துக்கு பயன்தரக்கூடிய அர்த்த சாஸ்திரம் முதலான நூல்களை கற்றுக் கொடுக்கக் கூடாது. தான் சாப்பிட்டு மிகுந்த உச்சிஷ்டான்னத்தை (சாப்பிட்டு மிகுந்தது) சிஷ்யனல்லாத சூத்திரனுக்கு கொடுக்கக் கூடாது. ஹவிசில் மிகுந்ததையும் கொடுக்கக்

கூடாது.அவனுக்கு தர்மத்தையும் விரதங்களையும் தானே நேரடியாக போதிக்காமல் இன்னொரு வரைக் கொண்டு போதிக்கச் செய்ய வேண்டும்.

**81.** அவ்வாறன்றி, எவன் இந்த சூத்திரனுக்கு தர்மத்தையும், விரதங்களையும் உபதேசிக்கிறானோ அவன், அந்த சூத்திரனோடு கூட அசம்விருதம் என்னும் பெயருள்ள நரகத்தில் விழுவான்.

**99.** சூத்திரர்கள் அருகில் வேதம் ஓதக் கூடாது.

**166.** பிராம்மணனை அறிவுபூர்வமாக புல்லால் அடித்தாலும் இருபத்தொரு ஜன்மங்கள் நாய் முதலான ஈனப் பிறப்புகளை எடுக்க வேண்டி வரும்.

**205.** வேதமறியாதவன் செய்யும் யாகத்திலும், கிராம புரோஹிதன் செய்யும் யாகத்திலும், பெண்களும் நபும்சகர்களும் செய்யும் யாகத்திலும் பிராம்மணன் போஜனம் செய்யக்கூடாது.

**206.** இவர்கள் யாகத்தில் ஹோமம் செய்தால் அந்த ஹவிஸ் சாதுக்களுக்கு அலக்ஷ்மிகரமாறெது. தேவர்களுக்கு பிரதிகூலமாகிறது. எனவே இத்தகைய யாகங்களில் சாப்பிடக் கூடாது.

**211.** பெரும் பாதகனின் அன்னம், நபும்சகனின் அன்னம், டாம்பீகக்காரனின் அன்னம், புளித்துப்போன பால், பழைய சாதம், சூத்ரன் சாப்பிட்டு மிகுந்த அன்னம் - இவைகளைச் சாப்பிடக்கூடாது.

**218.** சூத்திரனுடைய அன்னத்தைப் புசித்தவனுடைய பிரம்ம தேஜஸ் அழியும்.

**233.** சூத்திரனிடம் சமைக்கப்பட்ட அன்னத்தைச்

சாப்பிடக் கூடாது. வேறு வழியின்றேல், ஒரு பொழுதுக்குத் தேவையான அளவு அரிசி, காய்கறிகளைப் பெற்றுக் கொள்ளலாம்.

**245.** உத்தமர்களோடு சம்பந்தம் வைத்துக் கொள்ளும் பிராம்மணன் உத்தம நிலையை அடைவான். அதமர்களுடன் சம்பந்தம் வைத்துக் கொண்டால் சூத்திரத் தன்மையை அடைவான்.

## அத்தியாயம் 5

**16.** ஆயிரம் பற்களுடைய மீன்கள், சிவப்புமீன் , கும்பலாகத் திரியும் மீன்கள், சிங்கமுக மீன்கள், முள்நிறைந்த மீன்கள் முதலானவைகளை ஹவ்ய கவ்யங்களில் நியமிக்கப்பட்ட பிராம்மணர்கள் சாப்பிடலாம் மற்ற கர்த்தா முதலானோர் சாப்பிடக்கூடாது. அனைவருமே மற்ற சமயங்களில் சாப்பிடக்கூடாது.

**36.** வேதமந்திரங்களால் தீர்த்தம் தெளிக்கப்படாமல், வெறுமனே கொல்லப்பட்ட விலங்குகளை பிராம்மணன் எந்நாளும் சாப்பிடக் கூடாது. வேதமந்திரங்களால் தீர்த்தம் தெளிக்கப்பட்ட யாகங்களில் கொடுக்கப்பட்ட மாமிசத்தைச் சாப்பிடுவது ஆசாரமானது.

**104.** பிராம்மணன் இறந்தால் சவத்தை சூத்திரனை சுமக்கச் சொல்லக் கூடாது. அவ்வாறு செய்தால் இறந்த பிராம்மணனுக்கு சொர்க்கலோகம் கிட்டாது.

**147.** சிறுமியாயினும், யுவதியாயினும், முதியவளாயினும் எந்தப் பருவத்திலும் பெண்ணானவள் தன் இல்லத்திலும்கூட சுதந்திரமாக எந்தச் செயலையும் செய்யக் கூடாது.

**148.** பெண், பாலபருவத்தில் தந்தையின் வசத்தில் இருக்க வேண்டும். யுவதி, கணவனுக்கு வசப்பட்டு இருக்க வேண்டும். கணவன் இறந்து போன பிறகு புத்திரார்களின் வசத்தில் இருக்க வேண்டுமேயல்லாமல் சுதந்திரமாக இருக்கக் கூடாது.

**149.** ஒரு பெண், தந்தை, கணவன், புத்திரன் இவர்களை விட்டு தனித்திருக்க விரும்பக்கூடாது. அப்படி இருந்தால், பிறந்த வம்சத்துக்கும் புகுந்த வம்சத்துக்கும் நிந்தை ஏற்படும்.

**150.** எப்போதும் சிரித்த முகத்தோடு வீட்டு வேலைகளில் திறமை படைத்தவளாக, பொருட்களை நல்லபடி பேணிப் பாதுகாப்பவளாக, வீண்விரயம் செய்யாதவளாக இருக்க வேண்டும்.

**151.** தந்தை ஒரு பெண்ணை யாருக்கு மணம் புரிவிக்கிறானோ அல்லது சகோதரன் அப்பெண்ணை யாருக்கு மணம் புரிவிக்கிறானோ, அவனுக்கு வாழ்நாள் முழுவதும் பணிவிடை செய்யவேண்டும். அவன் இறந்தபிறகு அவனுக்கு சிராத்தம் முதலான கிரியைகளை நடத்திவர வேண்டும்.

**154.** சீலமற்றவனாயினும், பரத்தையர் சேர்க்கை கொண்டவனாயினும், வித்யையும் நற்குணங்களும் அற்றவனாயினும் பதிவிரதையான பெண் கணவனை எப்போதும் தெய்வமாகப் பூஜிக்க வேண்டும்.

**155.** கணவன் இல்லாமல் வேள்வியோ, விரதமோ, நோன்போ எதையும் பெண்கள் இயற்றுதல் கூடாது. கணவனுக்குக் கீழ்ப்படிந்து நடந்தாலே மனைவிக்குச்

சொர்க்கத்தில் உயர்பதவி கிடைக்கும்.

**157.** கணவன் இறந்தபிறகு, பதிவிரதையான பெண், காய்கனி, கிழங்குகளைச் சாப்பிட்டுக் கொண்டிருக்க வேண்டுமேயல்லாமல், மற்றொருவன் பெயரைக்கூட உச்சரிக்கக்கூடாது.

**158.** பதிவிரதையான பெண், கணவன் இறந்த பிறகு பொறுமையோடு நியமங்களைக் கடைப்பிடிக்க வேண்டும். கணவனுக்குச் செய்ய வேண்டிய சிராத்தம் முதலானவைகளைச் செய்ய வேண்டும். நாவிற்கு சுவை தேடாதவளாக, சம்போகத்தை வேண்டாதவளாக, உயிரோடு இருக்கும் வரை பிரம்மச்சரியத் தோடிருக்க வேண்டும்.

**160.** எனவே, கணவன் இறந்த பிறகு மனைவி பிள்ளைகள் அற்றவளாக இருப்பினும், வேறொரு ஆணை நாடாமல், கற்புள்ளவளாக இருந்தால், நித்ய பிரம்மச்சாரிகளைப் போல ஸ்வர்க்கலோகத்தை அடைவாள்.

**162.** பதிவிரதையான பெண்ணுக்கு எவ்விடத்திலும் இரண்டாவது மணம் விதிக்கப்படவில்லை.

**168.** மனைவிக்கு அந்திமக் கிரியைகளைச் செய்து, சாஸ்திர முறைப்படி அனைத்தையும் முடித்த பின்னர், வேறொரு பெண்ணை மணந்து மீண்டும் வைதிக அக்னியை ஏற்படுத்திக் கொள்ள வேண்டும்.

## அத்தியாயம் 7

**35.** நான்கு வர்ணத்தாரும் தத்தமது தர்மங்களை பற்றுதலோடு கடைப்பிடித்து ஒழுகுவதற்காகவும், நான்கு ஆஸ்ரமத்தாரையும் நன்கு காப்பதற்காகவும் அரசன் படைக்கப்பட்டான்.

## அத்தியாயம் 8

**20.** பிறப்பால் மட்டுமே பிராமணனான ஒருவர், அதாவது வேத நூல்களைக் கல்லாத அல்லது வேதங்கள் கூறும் செயல்முறைகளைக் கடை பிடிக்காத ஒருவன், ஆளும் மன்னன் விரும்பின், சட்டங்களுக்கு விளக்கமளிக்கலாம், அதாவது, நீதிபதியாகச் செயலாற்றலாம். அப்பணியை ஒரு சூத்திரன் (அவன் எத்துணைக் கற்றோனாயினும்) ஒருக்காலும் செய்தல் ஆகாது.

**27.** சூத்திரனை, சட்டப்பொருள் கூறுவோனாகக் கொண்ட ஒரு அரசு, சதுப்பு நிலத்தில் சிக்கிய பசு போல ஆழ்ந்து மூழ்கிவிடும்.

**142.** சாதுக்களுடைய தர்மத்தை அனுசரிப்பவன், நூற்றுக்கு மாதத்துக்கு இரண்டு வட்டியைப் பிராம்மணனிடம் வாங்கலாம்; மூன்று வட்டியை க்ஷத்திரியனிடம் வாங்கலாம்; நான்கு வட்டியை வைசியனிடம் வாங்கலாம்; ஐந்து வட்டியை சூத்திரனிடம் வாங்கலாம்.

**272.** அகந்தையினால், பிராம்மணனிடம் வந்து இப்படிச் செய், அப்படிச் செய், என்று தர்மோபதேசம் செய்யும் சூத்திரனுக்கு, அவன் அகந்தை அழியும் வண்ணம் அரசன் கொடுக்க வேண்டிய தண்டனை யாதெனில் -

எண்ணெயை நன்கு காய்ச்சி, அவன் நாவிலும் காதிலும் ஊற்ற வேண்டும். இதுவே தண்டனை.

**277.** வைசியனுக்கும் சூத்திரனுக்கும் இடையில் சண்டை ஏற்பட்டு வசை பேசினால், வசைமாரி பொழிந்தவன் வைசியன் என்றால், அவனுக்கு இரு நூற்றைம்பது பணங்கள் அபராதம் விதிக்க வேண்டும்

**277.** சூத்திரன் என்றால் ஐநூறு பணங்கள் அபராதம் விதிக்க வேண்டும்.

**279.** சூத்திரன், பிராம்மண க்ஷத்ரிய வைசியர்களை எந்த அங்கத்தால் அடிக்கிறானோ, அந்த அங்கத்தை வெட்ட வேண்டும். இதுவே மனு சாசனம் (மநோரனுஷாஸநம்).

**280.** அவன் கையாலோ தடியெடுத்தோ அடித்தால் அடித்த கையை வெட்ட வேண்டும். கோபத்தோடு காலால் உதைத்தால் காலை வெட்ட வேண்டும்.

**281.** சூத்திரன் அகங்காரத்தால் பிராம்மணனுடன் சமமான ஆசனத்தில் உட்கார்ந்தால் இடுப்பின் பின்புறத்தில் சூடு போட வேண்டும்.

**282.** சூத்திரன் அகங்காரத்தால், பிராம்மணன் மீது காறியுமிழ்ந்தால், அவன் உதடுகளை அறுக்க வேண்டும். பிராம்மணன் மீது சிறுநீர் கழித்து அவமானப் படுத்தியவனின் சிறுநீர் கழிக்கும் உறுப்பை அறுக்க வேண்டும். பிராம்மணன் மீது மலத்தை எறிந்தவனின் குதத்தை அறுக்க வேண்டும்.

**283.** பிராம்மணன் முடியைப் பற்றியிழுத்த சூத்திரன் கைகளை எந்தத் தயக்க முமின்றி வெட்டியெறிய வேண்டும். தாடி, மீசை, கழுத்து, குறி இவைகளைப் பற்றி

இழுத்தவனுக்கும் இதே தண்டனை விதிக்க வேண்டும்.

**359.** பிராம்மணனல்லாத ஒருவன் பிராம்மணப் பெண்ணை அடைய நினைத்தால் அவனுக்கு மரண தண்டனை விதிக்க வேண்டும்.

**365.** ஒரு பெண் தன்னைவிட உயர் குலத்தானை மணக்க நினைத்தால் அது தவறல்ல, அவளுக்கு தண்டனை எதுவும் இல்லை. ஆனால், உயர் குலத்துப் பெண் தன்னைவிட தாழ்ந்தவனை மணக்க விரும்பினால் அது சரியல்ல. அவளை அடக்கி வீட்டுக்குள்ளேயே வைத்திருக்க வேண்டும்.

**413.** ஒரு பிராமணன் சூத்திரனின் பணியை (விலை கொடுத்தோ அன்றியோ) கட்டாயப்படுத்திப் பெறலாம். ஏனெனில் சூத்திரர் பிராமணருக்கு ஏவல் செய்யவே படைக்கப்பட்டுள்ளனர்.

**414.** பிராம்மணனின் ஏவல் பணிகளைப் புரிவதால் சூத்திரன் மறுமையில் நல்வாழ்வைப் பெறுவான். எஜமானன் அவனை வேலையை விட்டுப் போகச் சொன்னாலும்கூட, இம்மையில் செய்யும் இந்தப் பணிவிடையால் மறுமையின்பம் கிட்டுவதால், அவன் இறுதிவரை பணி புரிய வேண்டும்.

**415.** ஏவலர்கள் ஏழு வகையினர்; போரில் சிறைப்பிடிக்கப்பட்டவன், பக்தியோடு தொண்டு புரிய வந்தவன், வைப்பாட்டியின் மகன், விலை கொடுத்து வாங்கப்பட்ட அடிமை, பிறரால் கொடுக்கப்பட்ட அடிமை, பரம்பரையாக பணி செய்பவன், அபராதத் தொகையை வேலை செய்து தீர்ப்பவன் என்னும் ஏழு

வகையினரே ஏவலர்களாவர்.

**417.** தன் வேலைக்காரனிடமுள்ள செல்வத்தை பிராம்மணன் கைப்பற்றலாம்; தவறில்லை. ஏனெனில், எஜமானனான பிராம்மணனுக்கே அந்த தனம் சொந்தம்.

## அத்தியாயம் 9

**2.** புருஷர்கள் இரவும் பகலும் ஸ்திரீகளைப் பாதுகாக்க வேண்டும். ஏனெனில் பெண்கள் கண்ணுக்கு ரம்யமானவற்றைக் காண்பதிலும், காதுக்கு ரம்யமானவற்றைக் கேட்பதிலும், ரம்யமான வாசனைகளை முகர்வதிலும், மனத்துக்கு ரம்யமானவற்றைச் செய்வதிலும் எப்போதும் ஈடுபடுவார்கள். இவ்வாறான விஷய சுகங்களை அனுபவிக்கும்போது சில தவறுகள் நேரிட வாய்ப்பு ஏற்படலாம். எனவே அத்தகைய வாய்ப்புகள் ஏற்படாமல் இருக்க பெண்கள் சுதந்திரமாகத் திரியாமல் ஆண்கள் தங்கள் வசத்தில் அவர்களை வைத்துக்கொண்டு பாதுகாக்க வேண்டும்.

**3.** சிறுவயதுப் பெண்ணை தந்தை பாதுகாப்பான். யௌவனப் பருவத்தில் கணவன் பாதுகாப்பான். வயோதிகத்தில் புத்திரர்கள் பாதுகாப்பார்கள். எனவே பெண் என்பவள் எப்போதும் பிறரால் பாதுகாக்கப்படுபவளேயன்றி, சுதந்திரமாக இருக்கத்தக்கவளல்ல.

**8.** கணவன் தன் ரேதஸ் ரூபத்தில் மனைவியினுள் பிரவேசித்து புத்திரனைப் பெறுகிறான். கணவனின் சொரூபத்தையே சுமந்து தன் மகனாகப் பெறுவதால் மனைவிக்கு ஜாயா: என்றும் பெயருண்டு.

**13.** மதுவருந்துதல், தீயோர் சேர்க்கை, கணவனை விட்டு விட்டு விலகியிருத்தல், வேலையேதுமின்றி ஊரைச் சுற்றுதல், தூக்கம், பிறர் வீட்டுக்குப் போய் நாட்கணக்கில் இருத்தல் இந்த ஆறும் ஒரு பெண்ணை தூற்றுதலுக்கு ஆளாக்கும்.

**14.** பெண்கள் ஆணின் அழகையோ, வயதையோ பார்க்க மாட்டார்கள். அழகனாக இருந்தாலும், குரூபியாக இருந்தாலும் பொருட்படுத்தாமல், ஆண்மகனாக இருந்தால் போதுமென்று அனுபவிப்பார்கள்.

**15.** பெண்கள் ஆசைப்படுபவர்களாக, சலன சித்தம் கொண்டவர் களாக இருப்பார்கள். இவர்கள் ஆத்மார்த்தமான நட்பை எவரிடமும் வைக்க மாட்டார்கள். இந்தக் காரணங்களால், எளிதில் மனம் மாறக்கூடியவர்களாக இருப்பார்கள். மனம் மாறி கணவனிடம் பற்றுதல் நீங்கும் வாய்ப்பு அதிகம் இருக்கும்.

**16.** பிரம்ம சிருஷ்டியில் பெண்களின் இயல்பு இவ்வாறாக இருப்பதால் ஆண்மகன் மேலான முயற்சிகளால் அவர்களைத் தன்வசப்படுத்தி வைத்துக் கொள்ள வேண்டும்.

**17.** பெண்கள் படுக்கை, ஆசனம், அலங்காரங்களுக்கு ஆசைப் படுவார்கள். காம குரோதங்களுக்கு வசப்பட்டிருப்பார்கள். செய்யத் தகாததைச் செய்பவர் களாகவும் துரோக பாவத்தோடும் இருப்பார்கள்.

**18.** ஜாதகர்மா முதலான மந்திரபூர்வமான கிரியைகள் பெண்களுக்கு தர்ம சாஸ்திரத்தில் விதிக்கப்படவில்லை. மந்திரங்களால் ஆண்கள் பாவத்தைத் தொலைத்துக்

கொள்வது போன்று பெண்கள் தொலைத்துக் கொள்ள முடியாது. பெண்கள் சுதந்திரமற்றவர்களாக இருப்பதால், தண்டனைக்குப் பயந்தோ, வசவுக்குப் பயந்தோ பொய் பேசுபவர்களாக இருப்பார்கள்.

**19.** மாதர்கள் பெரும்பாலும் விபச்சார தோஷம் உள்ளவர்கள் என்று அநேக சாஸ்த்திரங்களிலும் சொல்லப்பட்டிருக்கின்றன.

**29.** மனத்தாலும், வாக்காலும், சரீரத்தாலும் கணவனையே அனுசரித்திருக்கும் மனைவி, கணவன் தன் புண்ணிய பலன்களால் எத்தகைய உயர்ந்த லோகத்தை அடைகிறானோ, அதே லோகத்தை தானும் அடைகிறாள்.

**33.** பெண் என்பவள் நிலத்துக்குச் சமம். ஆண் விதைக்கு சமம். நிலமும் விதையும் சேர்வதால் சகல உயிர்களும் உண்டாகின்றன.

**35.** தோன்றும் உயிர்களெல்லாம் பீஜத்தின் (விதையின்) தன்மை களைக் கொண்டே தோன்றுகின்றன. எனவே பீஜம் யோநி இரண்டையும் பார்க்கும்போது பீஜமே சிறந்ததாகச் சொல்லப்படுகிறது.

**60.** பெரியோரால் அனுமதிக்கப்பட்டு விதவையைக் கூடுவதற்குச் செல்பவன், உடல் முழுதும் நெய்யைப் பூசிக்கொண்டு, மௌனமாக இருட்டில் அவளிடம் ஒரு சந்ததியை ஏற்படுத்த வேண்டும். அதற்கும் மேல் மீண்டும் இன்னொரு சந்ததியை ஏற்படுத்தக் கூடாது.

**65.** சந்ததியில்லாமல் போனால், மற்றொருவனிடமிருந்து பிள்ளை பெறலாம் என்று வேத மந்திரத்திலும் கூறப்படவில்லை. விவாக விதிகளில் விதவைக்கு

இன்னொரு விவாகத்தையும் சொல்லவில்லை.

**68.** விதவா விவாகமும், அல்லது அவர்களுக்கு சந்ததியைக் கொடுப்பதும் சாதுக்களால் தூஷிக்கப்படுகின்றன. ஆனால் வேணன் அரசாண்ட காலத்திலிருந்து பல குடும்பங்களில் அவை பாரம்பரிய பழக்கங்களாகி விட்டன.

**78.** கணவன் தன் மனத்துக்குப் பிடித்தவனாக இல்லாவிடினும், மனைவி அவனைக் கவனித்துக் கொள்ளவே வேண்டும். அதே போன்று அவன் நோயுற்றிருக்கும்போதும், போதை நிலையில் இருக்கும்போதும் அவனை கவனித்துக் கொள்ளாமல் அவமானப்படுத்துபவளை மூன்று மாதங்கள் பொறுத்துப் பார்க்க வேண்டும். பிறகு அவளுக்குக் கொடுத்த ஆபரணங்களை எடுத்துக் கொண்டு, அவளை விட்டுவிட வேண்டும்.

**81.** மனைவி மலடியாக இருந்தால் எட்டு ஆண்டுகள் வரை குழந்தை பிறக்கிறதா என்று எதிர்பார்த்துக் காத்திருக்க வேண்டும். அதற்கு மேல் இன்னொரு பெண்ணை மணம் புரிந்து கொள்ளலாம்.

**82.** கணவனுக்கு ஹிதத்தைச் செய்பவளாயும், கற்பிற் சிறந்தவளுமான மனைவி, நோயாளியாகிவிட்டால், அவள் அனுமதி பெற்று இன்னொரு பெண்ணை மணக்கலாம். ஆனால் எப்போதும் அவளை அவமானப்படுத்தலாகாது.

**83.** பொதுவாக இரண்டாம் மணம் புரிந்ததும், மூத்த மனைவி மிகவும் கோபத்தோடு நடந்து கொண்டால், அவள் கோபத்தைத் தணிக்கப் பார்க்க வேண்டும். அது இயலாத பட்சத்தில் அவளது பெற்றோரிடம் அனுப்பி

வைக்க வேண்டும்.

**90.** ஒரு கன்னிகை, தான் ருதுமதியான பிறகு, தந்தையோ சகோதரனோ தனக்குத் திருமணம் செய்து வைக்க முயற்சி செய்யாவிடில் மூன்று வருடங்கள் பொறுத்துப் பார்க்க வேண்டும். பிறகு தனக்குத் தக்க கணவனை தானே தேடி அடையலாம்.

**94.** ஆண் மகன் தனக்கு முப்பது வயது என்றால் பன்னிரண்டு வயது கன்னியை மணக்கலாம். இருபத்து நான்கு வயது என்றால் எட்டு வயது கன்னிகையை மணக்கலாம். இருபத்து நான்கு வயதுக்கு முன்பு ஆண்கள் திருமணம் செய்து கொள்ளத் தேவையில்லை. எந்த வர்ணத்தவராயினும் அவரவர் தமது படிப்பிலும், குலத் தொழிலிலும் முழுமையாகத் தேர்ச்சி பெற்று முடித்த பிறகுதான் மணம் புரிந்து கொள்ள வேண்டும்.

**178.** பிராம்மணன், சூத்திரப் பெண்ணிடம் காமம் கொண்டு அதனால் பிறந்த பிள்ளை, சிராத்த கிரியைகள் செய்ய அதிகாரமற்றவன். இத்தகைய பிள்ளைக்கு 'பாரசவன்' என்று பெயர்.

**241.** பிராம்மணன் தன்னிலை பிறழ்ந்து அறியாமையால் இக்குற்றங்களைச் செய்திருந்தால் ஐந்நூறு பணங்கள் அபராதம் விதிக்க வேண்டும். தெரிந்தே செய்திருந்தால் அவன் சொத்துகளை பறிமுதல் செய்து, அவனை நாட்டை விட்டு வெளியேற்ற வேண்டும்.

**242.** பிராம்மணனைத் தவிர்த்து மற்றவர்கள் தங்களையறியாமல் இத்தவறுகளை செய்ய நேரிட்டிருந்தால், அவர்களது மொத்த சொத்துக்களையும் பறிமுதல் செய்ய

வேண்டும். தெரிந்து வேண்டுமென்றே செய்திருந்தால் மரண தண்டனை விதிக்க வேண்டும்.

**313.** அரசன், தனக்கு மிகுந்த ஆபத்துகள் ஏற்பட்ட காலத்திலும்கூட பிராம்மணர்கள் தன்னிடம் கோபம் கொள்ளுமாறு நடந்து கொள்ளக்கூடாது. அவர்களுடைய கோபம் அவனை அவன் பரிவாரத்தோடு சேர்த்து அழித்து விடும்.

**314.** அக்னியை அனைத்தையும் உண்பவராகச் சபித்தது பிராம்மணரே. சமுத்திர ஜலத்தை ஒரு கை ஜலமாக்கிக் குடித்து சமுத்திரமே இல்லாமல் வற்றச் செய்தது பிராம்மணரே. சந்திரனை க்ஷயரோகம் ஏற்படுமாறு சபித்ததும், பின் காத்ததும் பிராம்மணரே. இத்தகைய பிராம்மணருக்கு கோபத்தை ஏற்படுத்திய எவர்தான் அதன்பின் சுகமாக வாழமுடியும்?

**315.** பிராமணர்கள் நினைத்தால் சொர்க்கம் முதலான உலகங்களையும் படைப்பார்கள் ; இந்திரன் முதலான தேவர்களையும் படைப்பார்கள் ; தேவர்களைச் சபித்து அவர்களை மானிடராக்குவார்கள். இத்தகைய சக்தி வாய்ந்த பிராம்மணர்களின் கோபத்துக்காளான எவர்தான் சௌக்கியமாக வாழமுடியும்?

**317.** அக்னி மேலான தெய்வமாக இருப்பதைப் போன்று பிராம்மணன் வித்வானாக இருந்தாலும் இல்லாவிட்டாலும் மேன்மையானவனேயாவான்.

**334.** வேத விற்பன்னர்களும், தங்கள் கர்மானுஷ்டானங்களை விடாது செய்பவர்கள் என்று புகழ் பெற்றவர்களும், இல்லறவாசிகளுமான பிராம்மணர்

களுக்கு பணிவிடை புரிவதே சூத்ரனுக்கு மேலான தர்மமாகும். இந்த தர்மத்தை நல்லபடி செய்வதாலேயே அவன் சொர்க்கத்தை அடைந்து விட முடியும்.

**335.** சூத்திரன், உள்ளும் புறமும் பரிசுத்தமானவனாக இருந்து, பணிவாகப் பேசுபவனாக, அகந்தையற்றவனாக பிராம்மணர்களுக்கு பணிவிடை புரிய வேண்டும். இயலாதபோது க்ஷத்திரியர்களுக்கும், அதுவும் இயலாதபோது வைசியர்களுக்கும் பணிவிடை புரிய வேண்டும். இப்படி க்ஷத்ரிய வைசியர்களுக்குப் பணிபுரிபவன் அடுத்து உயர்குலத்தில் பிறப்பான்.

**416.** மனைவி, மகன், அடிமை இம்மூவரும் தனமற்றவர்கள். ஏனெனில், இவர்களிடம் எவ்வளவு தனமிருந்தாலும் அது அவர்கள் உடைமையாகாது. அக் குடும்பத் தலைவனுடைய உடைமையேயாகும்.

**417.** தன் வேலைக்காரனிடமுள்ள தனத்தை பிராம்மணன் கைப்பற்றலாம் ; தவறில்லை. ஏனெனில், எஜமானனான பிராம்மணனுக்கே அந்த தனம் சொந்தம்.

## அத்தியாயம் 10

**4.** பிராம்மண, க்ஷத்ரிய, வைசியரென்னும் மூவர்ணத்தாரே த்விஜர்கள் (இரு பிறப்பாளர்கள்) எனப்படுவார்கள். இவர்கள் உபநயனம் என்னும் பூணூல் போடுவதும் காயத்ரி மந்திரத்தை உபதேசம் பெறுவதுமான கிரியையை செய்து கொள்ள வேண்டும். இதனால் இரண்டாம் முறை பிறப்பெடுத்தவராகின்றனர். அதனால் இருமுறை பிறந்வர்கள் என்னும் பொருள் படும்படி த்விஜர்கள் என்று சொல்லப்படுகிறார்கள்.

அடுத்து நாலாம் வர்ணத்தவன் சூத்திரன். ஆக மொத்தம் நான்கு வார்ணங்கள்தான் உண்டு. ஐந்தாவது என்று எதுவும் கிடையாது.

**5.** இந்த நான்கு வர்ணத்திலும் அந்தந்த வர்ணத்து ஆணும் பெண்ணும் திருமணம் செய்து கொண்டு அவர்களுக்குப் பிறந்த பிள்ளைகளே, துல்லியமாக அந்த வர்ணத்தைச் சேர்ந்தவர்களாவர். கலப்பினத்தால் பிறந்தவர்கள் வேறு பெயர்களோடு விளங்குவார்கள்.

**12.** சூத்திரனுக்கு வைசிய மனைவியிடம் பிறந்த பிள்ளை அயோகவன் எனப்படுவான். க்ஷத்ரிய மனைவியிடம் பிறந்த பிள்ளை க்ஷத்தா எனப்படுவான். பிராம்மண மனைவியிடம் பிறந்த பிள்ளை சண்டாளன் எனப்படுவான்.

**13.** மேல் வர்ணத்தாருக்கும் அவனைவிட கீழ்வர்ணத்துப் பெண்களுக்கும் பிறந்த பிள்ளைகள் அனுலோமர்கள் எனப்படுவர். கீழ் வர்ணத்தாருக்கும் அவனைவிட மேல் வர்ணத்துப் பெண்களுக்கும் பிறந்த பிள்ளைகள் பிரதி லோமர்கள் எனப்படுவர்.

அனுலோமர்களில் அம்பஷ்டனும் உக்ரனும் பிறப்பால் தாழ்ந்தவர்கள். பிரதிலோமர்களில் சூதன், வைதேகன் என்னும் இவ்விருவகையானவர்களும் பிறப்பால் தாழ்ந்தவர்கள்.

**32.** க்ஷத்ரியர்கள் உபநயனம் முதலான கிரியைகளை விட்டு விட்டதாலும், பிராம்மணர்கள் மூலமாக யக்ஞங்கள் பிராயச் சித்தங்கள் முதலானவைகளைப் பற்றி தெரிந்து கொள்ளாமையாலும் மெல்ல மெல்ல

சூத்திரத்தன்மையை அடைந்தார்கள்.

**34.** நான்கு வர்ணத்தாரால் கலப்பு ஜாதிகள் உருவாயின. இந்த ஜாதியரில் சிலர் மிலேச்ச பாஷையை பேசுபவராயினர். சிலர் ஆர்ய பாஷையே பேசுபவராயினர். ஆனாலும் இவர்கள் அனைவருமே தஸ்யூக்கள் (அடிமைகள்) எனப் பெயர் பெற்றனர்.

**40.** சண்டாளர்களும் ஸ்வபாகர்களும் ஊருக்கு வெளியில் வசிக்க வேண்டும். கொலையைத் தொழிலாக கொண்டவன் சண்டாளன். நாயையும் கழுதையையும் வளர்ப்பார்கள். இவையே இவர்களின் செல்வமாகும்.

**43.** ஊருக்குள் இவர்களுக்கு உணவு கொடுக்கும் போது வேலை யாட்களைக் கொண்டு கொடுக்கச் செய்ய வேண்டும். கிராமங்களிலோ நகரங்களிலோ இவர்கள் இரவில் சஞ்சரிக்கக்கூடாது.

**46.** நால்வார்ணத்தினின்றும் விலகிய கலப்பினத்தவனானவனைப் பார்க்க, அவன் செய்யும் தொழிலைக் கொண்டு அவன் நீசன் என்பதை அறிய வேண்டும்.

**51.** பசுக்கள், பிராம்மணர்கள், பெண்கள், பாலகர்களைக் காப்பாற்றுவதற்காக தம்முயிரையும் கொடுக்கின்ற கீழ்ஜாதிக்காரரர்கள் நல்லுலகத்தையடைவார்கள்.

**58.** நல்ல மண்ணில் விதைக்கப்பட்ட நல்ல விதை நல்லபடி முளைக்கும். அவ்வாறே நல்ல குலத்தில் உதித்த ஆணும் பெண்ணும் பெற்ற பிள்ளை உயர்ந்தவன். இவனே வைதீக சடங்குகள் செய்யத் தகுதி பெற்றவன்.

**62.** மேல் வர்ணத்தவன் தாழ்ந்தவன் தொழிலைச்

செய்வதால் தாழ்ந்தவனாகி விட மாட்டான். கீழ் ஜாதிக்காரன் மேல் வர்ணத்தார் தொழிலைச் செய்வதனால் உயர்ந்தவனாகி விடமாட்டான் ஆயின் அவரவர் தொழிலை விட்ட விஷயத்தில் இருவரும் சமமாகி விடுவார்கள்.

**81.** மாமிசங்களையும் அரக்கையும் விற்றவன் உடனே பிராமணத் தன்மையை இழப்பான். பாலை விற்றால் மூன்று நாட்களில் சூத்திரனாவான்.

**84.** பிராம்மணன் தன் பிறப்பினால் தேவர்களால் போற்றப்படு பவனாகிறான். ஏனெனில் உலகத்துக்குக் காரணமாயமைத்தவை வேதங்கள். வேதங்களே அனைத்து தர்மங்களையும் உபதேசக்கின்றன. அந்த வேதங்களை எப்போதும் ஓதுகின்ற வாக்கை உடையவன் பிராம்மணன். இவனது இத்தகைய வாக்கனாலேயே தேவர்கள் அனைவரும் நிறைவை அடைகின்றனர்.

**85.** கீழ் ஜாதியில் பிறந்தவன், மேல் வர்ணத்தாருக்குரிய குலத்தொழிலைச் செய்து ஜீவனம் நடத்தினால், அரசன் அவனைக் கண்டுபிடித்து அவன் செல்வத்தை பறிமுதல் செய்து நாட்டைவிட்டு - வெளியேற்ற வேண்டும்.

**86.** தொழில் உயர்ந்ததாக இல்லாவிட்டாலும், அவரவர் குலத் தொழிலே அவரவர்க்கு உயர்வைத் தருவது. மற்றவர் குலத்தொழில் உயர்ந்ததாக இருந்தாலும் அதைக் கடைப்பிடிக்கக் கூடாது; அது உயர்வைத் தராது. அப்படி பிறரது குலத் தொழிலைச் செய்பவன் தன் குலத்தினின்றும் நீங்கியவனாகிறான்.

**88.** சூத்திரன், தன் குலத் தொழிலான பிராம்மணர்

முதலான த்விஜர்களுக்கு பணி செய்யும் தொழிலைச் செய்ய இயலாத சூழ்நிலையில் தன் மனைவி மக்கள் பசியால் துன்புறாமல் காக்க கைத்தொழில்கள் எதையேனும் செய்து சம்பாதிக்கலாம்.

**95.** சாராயம், மாமிசம், புளிக்க வைக்கப்பட்ட சுராபானம், கள் இவையெல்லாம் யட்சர்கள் ராட்சதர்கள் பிசாசர்களுக்குரியவை. தேவர்களுக்குரியவை ஹோமம் செய்கின்ற ஹவிஸ். எனவே தேவர்குரிய ஹவிஸை உண்ணும் பிராம்மணன், யட்ச ராட்சத பிசாசர்களுக்குரியவற்றை உண்ணக் கூடாது.

**96.** சாராயம் குடித்து போதையில் இருக்கும் பிராம்மணன் மலத்திலும் விழலாம்; வேதமும் ஓதலாம்; வேறு கூடாத காரியம் எதுவும் செய்யலாம்.

**97.** எப்போது போதையிலிருந்து ஒரு பிராம்மணன் வேதவாக்கியம் கூறுறொனோ, அப்போதே அவனுடைய பிராம்மணத் தன்மை அவனிடமிருந்து நீங்கிவிடும். உடனடியாக அவன் சூத்திரனாகிறான்.

**110.** சூத்திரன், பிராம்மணனுக்கு பணிவிடை புரிவதைத் தவிர்த்து வேறு ஜீவனோபாயத்தை விரும்பினால், க்ஷத்ரியனிடத்தில் வேலைக்குச் சேரலாம். அல்லது செல்வந்தனான வைசியனிடத்தில் வேலைக்குச் சேரலாம்.

**111.** வேண்டுமானால் சூத்திரன் பிராம்மணனைப் பூஜித்து அவனுக்கு பணிவிடைகள் புரிய வேண்டும். இவன் பிராம்மண தாசன் என்று பெயர் பெறுவதனாலேயே தான் பிறந்த பயனை எய்தியவனாகிறான்.

**112.** பிராம்மணனுக்குச் சேவை புரிவதே சூத்திரனுடைய சுயதர்ம மாகும். அதுவே மேலான தர்மம் என்று சொல்லப்படுகிறது. வேறு எதைச் செய்வதாலும் அவனுக்கு பலன் கிடையாது.

**114.** சாப்பிட்ட பிறகு எஞ்சிய அன்னத்தை அவனுக்குக் கொடுக்க வேண்டும். பழைய துணிகளையும், பாத்திரங்களையும், தானியங்களையும் கொடுக்க வேண்டும்.

**117.** சூத்திரன் அசூயையில்லாமல் நல்லபடி தன் காரியங்களைச் செய்து வரவேண்டும். எவ்வளவுக்கெவ்வளவு இவன் மூவர்ணத்தாரிடமும் அசூயையின்றி காரியமாற்றுகிறானோ, அவ்வளவுக் கவ்வளவு உலகத்தாரால் நிந்திக்கப் படாதவனாக வாழ்ந்து, மறுமையில் நல்லுலகத்தையும் அடைவான்.

**118.** சூத்திரன் மிகுந்த தனத்தை அடைந்தாலும், தன் குடும்பத்தைக் காப்பாற்றும் அளவுக்கு மேல் சேர்த்து வைக்கக் கூடாது. அப்படி அவன் மிகுந்த தனவானாக இருந்தானேயாகில், தர்மத்தை அறியாதவனாக பிராம்மணர்களுக்குத் தொல்லைகளைத் தருவான்.

**124.** ஒரு சூத்திரனின் திறமை, உழைப்பின் தன்மை, அவனைச் சார்ந்துள்ளோரின் எண்ணிக்கை இவற்றைக் கணக்கில் கொண்டு பிராமணர் அவனுக்குத் தங்களுடைய குடும்பச் சொத்திலிருந்து பிழைப்பூதியம் வழங்கவேண்டும்.

**125.** எஞ்சியுள்ள தம் உணவையும், பழைய வீட்டுத் தட்டுமுட்டுப் பொருள்களையும் பிராமணர் சூத்திரருக்குத் தருதல் வேண்டும்.

## அத்தியாயம் 11

**6.** வேதங்களை நன்கு ஓதி உணர்ந்தவர்களாகவும், மனைவி மக்களோடு கிருஹஸ்தர்களாகவும் இருக்கின்ற பிராம்மணர்களுக்கு தானமளிப்பவன் சொர்க்கலோகத்தை அடைவான்.

**24.** எத்தருணத்திலும் பிராம்மணன் யக்ஞம் செய்வதற்கான தனத்தை சூத்திரனிடம் யாசிக்கக்கூடாது. அப்படி யாசித்து யக்ஞம் செய்தவன் அடுத்த பிறவியில் சண்டாளனாகப் பிறப்பான். ஆனால் யாசிக்காமல் வந்த பொருளை யக்ஞத்துக்கு உபயோகப்படுத்தலாம்.

**31.** வேதவிற்பன்னனான பிராம்மணன், தனக்கு அபகாரம் செய்தவனைத் தண்டிக்க நினைத்தால், அரசனிடம் சென்று முறையிட்டு, அரசன் விசாரணை செய்து, அதன் பிறகு தண்டனை வழங்க வேண்டிய அவசியம் கிடையாது. தானே ஹோமம் செய்து அதன் மூலமாக எதிரிக்கு வேண்டிய தண்டனை வழங்க முடியும்

**36-37.** வேதங்களில் விதிக்கப்பட்டுள்ள அன்றாட நைவேத்தியங்களை ஒரு பெண் செய்யக்கூடாது. அவள் அதைச் செய்தால் நரகத்திற்குப் போவாள்..

**42.** சூத்திரனிடம் யாசித்துப் பெற்று, அதைக் கொண்டு அக்னிஹோத்ரம் செய்பவன், அக்னி ஹோத்ரம் செய்த பலனை அடையமாட்டான். சூத்திரனுக்கு புரோகிதனாக இருந்தது போன்றதாகும் இது. இத்தகு செயலை வேதமறிந்தோர் நிந்திப்பர்.

**66.** திருடுவது, குடிகாரியான பெண்ணை த்விஜர்கள் மணப்பது, பெண்ணையோ சூத்திரனையோ வைசியனையோ க்ஷத்ரியனையோ கொல்வது, நாஸ்திக புத்தியோடிருப்பது

- இவை யாவும் உப பாதகங்கள் எனப்படும்.

**67.** மது, பெண்கள், சூத்திரர்கள், வைசியர்கள் அல்லது க்ஷத்திரியர்கள் மற்றும் கடவுள் நம்பிக்கையில்லாதவர்களைக் கொல்வது ஆகிய யாவும் சிறிய குற்றங்களேயாகும்.

**206.** பிராம்மணனைக் கொல்வதற்காக தடியைக் கையிலெடுத்தவனுக்கு நூறாண்டுகள் நரகவாசம் ஏற்படும். கையிலெடுத்ததோடு அடிக்கவும் செய்தவனுக்கு ஆயிரம் வருடங்கள் நரகவாசம் ஏற்படும்.

**207.** அடிக்கப்பட்ட பிராம்மணன் உடலிலிருந்து ஒழுகிய ரத்தம் பூமியில் எத்தனை மண் துகள்களை நனைக்கிறதோ, அத்தனை ஆயிரம் வருடங்கள், அடித்தவனுக்கு நரகவாசம் ஏற்படும்.

**235.** தவம் என்பது யாருமற்ற காட்டில் போய் உட்கார்ந்துதான் செய்ய வேண்டும் என்பதில்லை. ஒவ்வொருவரும் அவரவர் வாழ்க்கையையே தவமாக்கிக் கொள்ளலாம். ஞானத்தை அடைவதே பிராம்மணன் செய்யும் தவம். க்ஷத்ரியார்களுக்கு மக்களைக் காப்பதே தவம். வைசியர்களுக்கு வர்த்தகமே தவம். சூத்திரார்களுக்கு பணிபுரிதலே தவம்.

## அத்தியாயம் 12

**42.** யானை, குதிரை, சிங்கம், புலி, பன்றி என்னும் இப்பிறவிகள் தமோ குணத்தால் ஏற்பட்ட மத்திமநிலைப் பிறவிகள். அவ்வாறே சூத்திரர்களும் மிலேச்சர்களும் கூட தமோ குணத்தால் ஏற்பட்ட மத்திம நிலைப் பிறவிகளேயாவர்.

- ☸ -

## வேதங்கள், மனுஸ்மிருதி உள்ளிட்ட பல இந்து நூல்கள் சூத்திரர்கள் மற்றும் பெண்கள் குறித்து கூறியது பற்றி

### டாக்டர்.பி.ஆர்.அம்பேத்கர்

ரிக்வேதத்தின் பத்தாவது மண்டலம் தொண்ணூறாவது பாடல் புருஷ சுக்தம் எனப்படும். இந்தப் பாடலில் சூத்திரர்கள் தோற்றம் பற்றிக் கூறுகிறது.

**1.** *புருடன் ஆயிரம் தலைகளும், ஆயிரங்கண்களும், ஆயிரங் கால்களும் உள்ளவன். அவன் புவியின் எல்லாப் பக்கங்களிலும் பரவி அதைவிடப் பத்து விரல்கள் அளவுக்கு மிஞ்சி நிற்கிறான்.*

**2.** *புருடனே இதுவரை இருந்து வந்துள்ள, இனி இருக்கப் போகும் இந்த முழுப் பிரபஞ்சமும் ஆவான். அவன் அழியாமையைத் தரும் தலைவன். அவன் சீவர்களின் உணவாக எங்கும் பரவுகிறான்.*

**3.** *அவனுடைய மகிமை அத்தனை பெரியது. அவன் இந்த மகிமையையும் விஞ்சும் மகிமையுள்ளவன். எல்லா சீவர்களும் அவனுடைய கால்பங்கு அளவே மகிமையுடையவை. அவனுடைய முக்கால்பங்கு அளவு அமுதமாவதால் சோதியிலே நிலைத்துள்ளது.*

**4.** *புருடனுடைய முக்கால் பாகம் மேலே ஏறிற்று. இந்த உலகத்தில் மிகுதியாக கால் பாகம் அடிக்கடி இயங்குகின்றது. அது பல வடிவங்களில் உயிருள்ளவற்றிற்கும் உயிரற்ற பொருள்களுக்கும் சென்றது.*

**5.** *அவனிடமிருந்து விராஜன் பிறந்தான். விராஜனிடமிருந்து புருடன் பிறந்தான். பிறந்தவுடன் முன்னும் பின்னும்*

இருந்ததைவிடப் பூமியைப் பெரிதாக்கினான்.

**6.** தேவர்கள், புருடனைப் பலிப் பொருளாக்கி யக்ஞத்தை நடத்தியபோது, வசந்தம் அதற்கு நெய்யாயிற்று. கோடை அதற்கு விறகாயிற்று; சரத்காலம் அதன் அவிப் பொருளாயிற்று.

**7.** சிருஷ்டிக்கு முன் பிறந்த புருடனை அவர்கள் யக்ஞத்தில் அவிப்பொருளாகத் தருப்பைப் புல்லால் தெளித்துப் பலியிட்டார்கள். ஸாத்திரியர்களும், ரிஷிகளுமான தேவர்கள் இவ்வாறு புருடனை அவிப்பொருளாகக் கொண்டு யக்ஞத்தை நடத்தினார்கள்.

**8.** ஸர்வாத்மாவான புருடனைப் பலியிட்டு நடத்திய யக்ஞத்திலிருந்து தயிரும் நெய்யும் தோன்றின. அவை வானத்தில் சஞ்சரிக்கும் பிராணிகளையும் சாதுவான விலங்குகளையும் கொடிய வனவிலங்குகளையும் உருவாக்கின.

**9.** எங்கும் வியாபித்த இந்த யக்ஞத்திலிருந்து ரிக், ஸாம வேதங்கள் தோன்றின. அந்த யக்ஞத்திலிருந்து சந்தங்கள் பிறந்தன, யஜுர் தோன்றியது.

**10.** அந்த யக்ஞத்திலிருந்து குதிரைகளும், இருவரிசைப் பற்களுள்ள விலங்குகள் அனைத்தும் பிறந்தன. பசுக்கள் அதிலிருந்து தோன்றின. அந்த யக்ஞத்திலிருந்து ஆடுகளும் பிறந்தன.

**11.** தேவர்கள், புருடனைக் கூறுபோட்டபோது எத்தனை விதமாக கூறுபோட்டார்கள்? எது அவனுடைய முகமானது? எவை கைகளாகவும், தொடைகளாகவும், கால்களாகவும் ஆயின?

**12.** பிராமணன் அவனது வாயானான். ராஜன்யன்

அவனுடைய கைகளானான். அவனுடைய தொடை பாகம் வைசியனாயிற்று. அவனுடைய பாதங்களிலிருந்து சூத்திரர் பிறந்தனர்.

(இப்படித்தான் இந்துக்கள் வணங்கும் வேதங்களில் சூத்திரர் தோற்றம் பற்றி கூறப்பட்டுள்ளது. அதை மற்ற இந்து புனித நூல்களான வாசிட்ட தரும சூத்திரம், விஷ்ணு ஸ்மிருதி, நாரத ஸ்மிருதி, கௌதம தரும சூத்திரம், மனுஸ்மிருதி ஆகிய சட்ட விதிமுறைகள் ஏற்றுக் கொண்டு விளக்கின.) அது குறித்த சுருக்கத்தினை டாக்டர் அம்பேத்கர் தருவது வருமாறு :

**1.** சூத்திரர்கள் சமுதாய வரிசையில் கடைசி வகுப்பைச் சேர்ந்தவர்கள்

**2.** சூத்திரர்கள் தூய்மையற்றவர்கள். அதனால் புனித செயல்களை அவர்கள் பார்க்கும்படியோ, கேட்கும்படியோ செய்யக்கூடாது.

**3.** மற்ற வகுப்பினர்களுக்கு மதிப்பு கொடுப்பது போல் சூத்திரர்களுக்கு மதிப்பு கொடுக்கக்கூடாது.

**4.** சூத்திரனுடைய உயிருக்கு எவ்வித மதிப்பும் கிடையாது. ஆதனால் அவனுக்கு எந்த வித நஷ்ட ஈடும் கொடுக்காமல் யார் வேண்டுமானாலும் அவனைக் கொன்று விடலாம். அப்படி ஏதாவது நஷ்ட ஈடு கொடுப்பதாயின் பிராமணர், சத்திரியர் மற்றும் வைசியருக்காகக் கொடுப்பது போலல்லாது மிகச் சிறிதளவே ஒரு தொகையைக் கொடுத்தால் போதும்.

**5.** சூத்திரன் அறிவைப் பெறக்கூடாது. அவனுக்குக் கல்வி போதிப்பது ஒரு பாவம்; ஒரு குற்றச் செயலுமாகும்.

**6.** ஒரு சூத்திரன் சொத்துக்களைச் சேர்க்கக் கூடாது.

ஒரு பிராமணன் அவனது சொத்துக்களை தன் விருப்பப்படி எடுத்துக் கொள்ளலாம்.

**7.** சூத்திரன் அரசாங்க பதவியில் இருக்கக்கூடாது.

8. சூத்திரனது கடமைகளும், மீட்சி பெறுவதும் மேல் சாதிக்காரர்களுக்குப் பணிவிடை செய்வதில்தான் இருக்கிறது.

**9.** மேல்சாதிக்காரர்கள் சூத்திரர்களுடன் கலப்பு மணம் செய்து கொள்ளக் கூடாது. மேல் சாதிக்காரர்கள் சூத்திரப் பெண்களை வைப்பாட்டிகளாக வைத்துக் கொள்ளலாம். ஆனால் ஒரு சூத்திரன் ஒரு உயர்சாதிப் பெண்ணைத் தொட்டு விட்டாலோ, அவன் கடுமையான தண்டனைக்கு உள்ளாக வேண்டும்.

**10.** சூத்திரன் கொத்தடிமையாகவே பிறந்தவன்; எப்போதும் கொத்தடிமையாகவே வைக்கப்பட வேண்டியவன்.

(ஆதாரம். சூத்திரர் யார் ? அவர்கள் எவ்வாறு நான்காம் வர்ணத்தவராயினர் ஆசிரியர் டாக்டர். அம்பேத்கர்)

- ☸ -

# *ஸ்த்ரீகளுக்குரிய பத்ததி* (1957)

**பெண்கள் குறித்து வேதங்கள் உள்ளிட்ட பிற இந்து மத புனித நூல்கள் கூறுவதை ஸ்ரீ. த்ர்யம்பகரமகி அவர்களால் தொகுக்கப்பட்டு எஸ்.ஆர்.கிருஷ்ணமூர்த்தி அய்யர் அவர்களால் வெளியிடப்பட்டப் புத்தகத்தில் சில பகுதிகள்.**

☸ *மனைவி கணவன் எழும்முன் விழித்துக்கொள்ள வேண்டும். இதையே யாக்ஞவல்க்யர்:- எவள் கணவன் தூங்கியபின் தூங்குகிறாளோ, முன்பே விழித்துக் கொள்ளுகிறாளோ, மனதில் மற்றொருவனை இஷ்டப்படவில்லையோ, அவளே பதிவ்ரதை என்றறிக.*

☸ *காலையில் வீட்டைப் பெருக்குவது முதலானதைச் செய்ய வெண்டும். அதுவும் அவ்விடமே (மார்க்கண்டேய புராணத்தில்) எவனுடைய வீட்டில் பெருக்காமல் கதிரவன் ஒளி விழுகின்றனவோ அவனிடம் பித்ருக்களும் தேவர்களின் தாய்களும் தங்கமாட்டார்கள்.*

☸ *பெண்கள் தினந்தோறும் காலையில் கோமயத்தால் வீட்டை மெழுக வேண்டும். ஆதலால் தூக்கங்களைப் பார்க்கமாட்டாள்.*

☸ *வியாஸர் கூறியபடி - மங்களகாரியம் செய்பவளாயும், அடிக்கடி மங்களகாரியம் செய்து பழக்கமுள்ளவளாயும், ஒவ்வொரு வீட்டின் சாமான்களைச் சுத்தமாய் வைத்துக்*

கொள்பவளாயும் இருக்க வேண்டும் கணவனின் விருப்பத்தின்பேரில் தனங்களைச் சேகரிக்க வேண்டும்.

☸ பத்னீ ஸமீபத்திலிருந்தால் தோஷத்தை வேதம் கூறுகிறது. மனைவி பார்த்துக் கொண்டிருக்கும்போது கணவன் உண்ணக்கூடாது. அது சந்ததி விருத்தியை கெடுக்கும். பரிமாறும்போது கையால் பரிமாறலாகாது.

☸ கணவரின் பாதங்களைப் பூஜித்தப்பின் மனைவி சாப்பிட வேண்டும். மேலும் கணவர் சாப்பிட்ட மீதியைப் பத்னி சாப்பிடவேண்டும்.

☸ வியாஸர் :- அன்னம், பானம், பழம் முதலியவற்றைக் புருஷன் தின்ற மீதியை வணங்கி அதை மஹாப்ரஸாதம் என்று சொல்லி, புருஷன் கொடுத்ததை மனைவி வாங்கிக் கொள்ள வேண்டும் என வியாசர் சொல்கிறார்.

☸ புருஷன் சாப்பிடாத அன்ன பானங்களை பத்னி ஒதுக்கித் தள்ள வேண்டும். அதை வியாஸர் - எதைப் பர்த்தா குடிக்கவில்லையோ, சாப்பிடவில்லையோ, தின்னவில்லையோ அவைகளை மனைவி விலக்க வேண்டும் என்கிறார்.

☸ புருஷனை விட்டு மனைவி விருந்து சாப்பிடக்கூடாது. எவள் பதியை விட்டு விருந்துண்கிறாளோ அவள் க்சாபப்பன்மியாகவோ, தன் விஷ்டையைப் புசிக்கும் பன்றியாகவோ பிறப்பாள்.

☸ விடியற்காலையில் வீடு பெருக்காவிடில் தோஷம், மார்க்கண்டேய புராணத்தில் : எவள் ஸந்தியில் வீடு பெருக்கவில்லையோ, அவள் ஒவ்வொரு ஜன்மத்திலும் கணவனில்லாதவளாயும் பிள்ளைப் பேரில்லாதவளாகவும் இருப்பாள்.

❆ ச்ராத்தத்திலும், யக்ஞத்திலும், நியம காலத்திலும் கணவன் வெளித் தேசத்துக்குப் போயிருந்தால் மனைவியானவள் தின்னக்கூடாது. அதாவது பல் தேய்க்கக்கூடாது.

❆ பர்த்தாவின் பாதங்களை நமஸ்கரித்து அதன் பிறகே தூங்க வேண்டும். வேலைக்காரர்கள் இருந்தபோதிலும், மாமியார், மாமனார்களுக்கும், புருஷருக்கும் தானே சேவை செய்ய வேண்டும்.

❆ மாமனார், மாமியார்களுக்கும் கணவனுக்குச் செய்வதுபோல். குணம் நிரம்பியிருந்து பாத பூசை செய்க.

❆ வீட்டில் சொல்லாமலும், உத்தரீயமில்லாமலும், வேகமாயும் வெளியில் செல்லக்கூடாது. வியாபாரீ, சன்யாசி, வைத்யன், கிழவன் இவர்களைத் தவிர இதரர்களிடம் பேசக் கூடாது. நாபி வெளியில் தெரியக்கூடாது. கால் மணிக்கட்டு வரையில் வஸ்த்ரகாரணம், ஸ்தனங்கள் வெளியில் தெரியலாகாது. பளிச்சென சிரிக்கக்கூடாது. புருஷனையும், அவன் பந்துக்களையும் திட்டக்கூடாது.

❆ பிராமன, சத்திரிய, வைசியருக்கு மந்திரங்களுடன் கூடிய குளியல் போல பெண்கள் மற்றும் சூத்திரர்களுக்குக் கிடையாது என்று விஷ்ணு ஸ்மிருதி சொல்கிறது.

❆ வயதுக்கு வந்தப் பெண் தனது கணவனுடன் கூடாவிட்டால் நாய், பன்றி ஜன்மமாகப் பிறப்பாள்.

❆ கணவன் இறந்தவுடன் எந்த மனைவி அக்னி ப்ரவேசம் செய்கின்றாளோ, அவள் அருந்ததிக்குச் சமமானவள், சொர்க்கலோகத்தில் சிறப்பையடைகிறாள்.

❆ சொர்க்கத்தை விரும்பும் மனைவிகளுக்கு கணவனே பரமேஸ்வரன். எந்த மனைவி கணவனை நிந்திப்பவளாய்

மற்றத் தர்மங்களை அனுஷ்டிக்கின்றாளோ அவள் மறு பிறப்பில் நாயாய் ஆவாள்.

☸ பாரதத்திலும் :- எவள், காமத்தாலோ, துவேஷத்தாலோ திமிராலோ கணவனை அவமதிக்கின்றாளோ அவள் ஏழு ஜன்மங்கள் வரையில் நரகத்தையடைவாள், இதில் மன்னிப்பு கிடையாது. எவள், உயிராலோ, பணத்தாலோ கணவனை வஞ்சிப்பாளோ அவள் நூறு பிறவிகளில் புழுவாய்ப் பிறந்து பிறகு சண்டாளியாய்ப் பிறப்பாள்.

☸ எவள் தரித்திரன், அல்லது வியாதியுள்ளவன், அல்லது மூர்க்கனான கணவனை அவமதிக்கின்றாளோ அவள் இறந்த பிறகு பெண் பன்றியாய்ப் பலமுறை பிறப்பாள்.

☸ நெற்றியில் திலகம் வைத்துக்கொள்வதை மார்க்கண்டேயர் சொல்லுகிறார்:- மஞ்சள், மை, சிந்தூரம், குங்குமம், ரவிக்கை, தாம்பூலம், மங்களாபரணம், தலைவாரிக் கொள்வது, தலைமுடி, கை காதுகளுக்கு அலங்காரம் இவைகளைப் கணவனின் ஆயுளை அதிகரிக்கும் எனவே அவற்றை விட க்கூடாது.

☸ வஸிஷ்ட ஸம்ஹிதையில் :- ரவிக்கை, கழுத்தில் நூல், காது ஓலை, மை, கண்ணாடி ஆபரணம், மஞ்சள் குளிப்பது, நெற்றியில் திலகம், தலைவாரிக்கொள்வது, பாதத்திற்கு உருட்டு, மூக்குக்கு மூக்குத்தி, தாம்பூலம் முதலிய சின்னங்கள் புண்யம் செய்த மனைவியின் லட்சணம்.

☸ மணிக்கட்டிலும் கழுத்திலும் கண்ணாடி ஆபரணத்தையுடைய மனைவி புண்ய சரிதமுடையவள். அவள் செய்யும் சமையல் சுத்தமானது. மணிக்கட்டிலும் கழுத்திலும் கண்ணாடி ஆபரணமற்றவள் பல பிறவிகளில்

விதவை என்று அறிக.

☸ எவ்விதத்தாலும் கணவனுடன் மனைவி அனுமரணம் ஏற்க வேண்டும். அப்படி செய்ய முடியாவிடில், விதவை தன் சீலத்தைக் காக்க வேண்டும். சீலத்தைக் கெடுத்தால் பாவம் செய்தவளாவாள். அவள் கெடுவதால் அவளின் கணவன் சொர்கத்திலிருந்து விழுவான். அவளின் தாய், தந்தை மற்றும் பித்ருக்கள் சொர்கத்திலிருந்து நழுவுவார்கள் என பாரிஜாதத்தில் ஆச்வலாயனர் சொல்கிறார்.

☸ புருஷன் இறந்த பிறகு, சுபமான புஷ்பம், மூலாம் பழம் இவைகளால் தேஹத்தை ஒடுக்க வேண்டும். அன்ய புருஷனின் பெயரைக்கூட உச்சரிக்கக் கூடாது என மனு சொல்கிறார்.

☸ யாக்ஞவல்க்யர் :- கணவன் இல்லாதவள் பிதா, மாதா, பிள்ளை, ப்ராதா, மாமியார், மாமனார், அம்மான் இவர்களுள் யாராவது ஒருவருடன் இல்லாமலிருக்கக் கூடாது. அப்படி மீறி இருந்தால், ஊரார் பழிக்கக் கூடியவளாவாள் என யக்ஞவல்கியர் கூறுகிறார்.

☸ ஆதித்ய புராணத்தில்: எந்த ஸ்த்ரீ, பர்த்தாவினுடைய, அல்லது புத்ரனுடைய அனுக்ஞையின்றி எந்தப் பரலோகார்த்தமான தர்ம கார்யத்தைச் செய்கின்றாளோ அவளின் அக்கார்யம் பலனற்றதாயாகின்றது

- ☸ -

## ஆதார நூல்கள்

1. மனுதர்ம சாஸ்த்திரம், இராமநுஜாசாரியார், பதிப்பு நா.முத்துரங்க செட்டியார் - முத்துகோவிந்த செட்டியார் பு.க.சுப்புராய முதலியார் பிழைத்திருத்தி சபாபதி முதலியார்

கல்விவிளக்க அச்சுக்கூடத்தில் அச்சடிக்கப்பட்டது. டிசம்பர் கஅசுரு 1865 டிசம்பர்

2. மனுநீதி எனும் தர்ம சாஸ்த்திரம் உரையாசிரியர் பிரம்மபீடம் இளைய பீடாதிபதி அன்னை ஸ்ரீ ஆனந்த நாச்சியாரம்மா - இந்து பப்ளிகேஷன் 2011

4. மநு தர்ம சாஸ்திரம் - திருலோக சீதாராம், பதிப்பாசிரியர் சிரோமணி, பாகவத சூடாமணி ஏ.கே.கோபாலன் (1961)

3. ஸ்த்ரீகளுக்குரிய பத்ததி - ஸ்ரீ.த்ர்யம்பகரமகி அவர்களால் தொகுக்கப்பட்டு எஸ்.ஆர்.கிருஷ்ணமூர்த்தி அய்யர் அவர்களால் வெளியிடப்பட்டப் புத்தகம் (1957)

- ☸ -